




# ஸப்தகிரி

ஆகஸ்ட், 1984
விலை ரூ. 1/-



திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



உருகும் அடியார் உள்ளூற உள்ளே
    ஊறும் தேனே வருக
உண்ணத் தெவிட்டாதச் சிவானந்த
    ஒளியே வருக புலன்வழி போய்
திருகும் உள்ளத்தார் நினைவினுக்கு சேயோய் வருக
    எமை ஆணட செல்வா வருக இணைவிழியால்
பருகும் அமுதே வருக உயிர்ப்பைங்கூழ்
    தழைக்கக் கருணை மழை
பரப்பும் முகிலே வருக நறும்பாகே
    வருக வரை இழித்த
முருகவேட்கு முன்உதித்த
    முதல்வர் வருக வருகவே




ஆகஸ்ட், 1984

மலா 15
இதழ் 3

தனிப்பிரதி ரூ. 1
வருடச் சந்தா ரூ. 12





பிரதிகளுக்கு:

THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road,
TIRUPATI.


# உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

முகப்பில் : ஸ்ரீகிருஷ்ணர்—கே. ஜகதீஷ்.

பின்னட்டையில் : வாமனின் திரிவிக்ரம அவதாரம்.

இரண்டாவது : ஸ்ரீ விநாயகப் பெருமான்—மா. ஸ்ரீநிவாசராவ்.

மூன்றாவது : மந்த்ராலயா ஸ்ரீராகவேந்திர சுவாமி—மதுகிரிராம்.

# உங்களுடன்....

ஆடையின்றிப் பிறந்து, கிடைத்ததைப் பிடித்ததை அப்படியே உட்கொண்டு குகைகளிலும் மரங்களிலும் வாழத் தலைப்பட்ட ஆதிமனிதன் பிறகு அனலின் அருமையினையும், ஆடையின் அவசியத்தையும் உணர்ந்து, தேவைகளை வளர்த்துக் கொண்டான்! ஆசைகளைப் பெருக்கிக் கொண்டான். எனினும் வயிறு மட்டுமே தனது உலகம் என்று நினைத்திருந்த அவன், உதய காலத்து சூரியனின் உன்னதத்தையும், அந்தி மழையின் அழகையும், வானவில்லின் வண்ண ஜாலத்திலும் தன்னைப் பறிகொடுத்தான். தான் அருகே இருந்தாலும் தன காதுகளில் விழாத ஒரு பூனையின் காலடி ஓசையினை, தனக்கு எந்த விதத்திலும் ஒப்பாகாத ஓர் எலி கேட்டு ஓடி மறைய எத்தனிக்கும் செய்கையைக் கண்டு பிரமித்தான். பிரமித்த அளவிலே சிந்தித்தான். சிந்தனையின் விளைவே சமய உணர்வாகும்.

இயற்கைப் படைப்பின் பின்னணியில் ஏதோ ஒரு சக்தி இயங்குவதை, இலங்குவதைக் கண்ட மனிதன், முதலில் அதனைக் கண்டு அதிசயத்துப் பின்னர் அஞ்சி, அதனைத் தொடர்ந்து, அதனை வழிபட ஆரம்பித்தான். அதற்குப் பெயர்கள் பலவும், உருவங்கள் பலவும், உறைவிடங்கள் பலவும் எழுப்பினான். வழிபாடு முறைகளை ஏற்படுத்தினான். நம்பிக்கைகளை உருவாக்கி, வாழ்க்கையினைத் தனக்கு நம்பிக்கைத் தரும்படியாக மாற்றிக் கொண்டான். அவ்வகையில் ஒரு 'சக்தி'யின் மீது உள்ள நம்பிக்கை காலப் போக்கில் பல நம்பிக்கைகளாக மாறின. அந்நம்பிக்கைகளின் தொகுப்பே பல சமயங்களாக உருவெடுத்தன. நாட்டுக்கு நாடு, மனிதனுக்கு மனிதன் நம்பிக்கைகள் பெருகி வந்தபோது சமயங்களும் பெருகின. இதனால் வேற்றுமையில் ஒற்றுமை காண்பதற்குப் பதிலாக ஒற்றுமையில் பல வேற்றுமைகள் கண்டு பிடிக்கப்பட்டு பிரச்சனைகள் பெருகலாயின.

இப்பிரச்சனைகளுக்கு அடிப்படைக் காரணம், மற்றைய சமயங்களைப்பற்றி ஒரு சமயத்தார் புரிந்து கொள்ளத் தவறுவதாலும், தன் சமயத்தைப்பற்றி நன்கு அறிந்து கொள்ளாததாலுமேயாம். எல்லா சமயங்களின் அடிப்படை இலட்சியம், இப்பூவுலகைப் படைத்துக் காக்கும் அப்பரம்பொருளின் பெருமையை உணர்ந்து, அவனைத் தொழுதேத்தி, அவனுடன் இரண்டறக் கலத்தலுமேயாகும். இம்முயற்சியின்போது மனிதன் கற்றுக்கொள்ள வேண்டிய பண்புகள் பல. அன்பு, இரக்கம், பொது நலம், பரந்த மனப்பான்மை போன்ற பல, அப்பரமனிடம் நம்மை அழைத்துச் செல்லும் படிகட்டுக்களாக அமைகின்றன. இவற்றைத்தாம் எல்லாச் சமயங்களும் வலியுறுத்துகின்றன. இதனை ஏன் இன்றைய உலக மனிதன் நினைக்கத் தவறுகின்றான்? வறுமையில் வாடும் நாட்டினரும் இத்தவறைச் செய்கின்றார்களே, ஏன்? பிற சமயங்களைக் குறை கூறிக்கொண்டு வாழும் அவன் தன் சமயத்தைப்பற்றி அறிந்து கொள்ள முயற்சிக்கவில்லை, விருப்பப் படவில்லை. தன் மனைவி, தன் பிள்ளை, தன் வீடு என்ற அளவில்தான் அவன் உழைக்கவும் சிந்திக்கவும் முற்படுகின்றான். மனிதனின் பலவீனத்திற்கும் அறிவீனத்திற்கும் இடையே சமயம் அலைகழிக்கப்படுகின்றது. தன் சமயத்தைப்பற்றி புரிந்து கொண்டால்தான் பிற சமயங்களின் நிறைகுறைகள் தெரியவரும். சமயங்கள் யாவும் மக்களால மக்களுக்காகத் தோற்றுவிக்கப்பட்டன. எல்லா சமயங்களினுள்ளும் ஏதாவது ஒரு வகையில பல நிலைகளில் ஒற்றுமைகள் பல நிலவி வருகின்றன. சடங்குகளின் பெயர்களும் முறைகளும் மாறுபட்டாலும் அவற்றின் அடிப்படைத் தத்துவங்கள், அதன் இலட்சியங்கள் ஏறக்குறைய ஒன்றாகத்தான் உள்ளன என்பது நேர்மையான முறையில் சிந்தித்தால் தெரியவரும். கலாசார அடிப்படையில், சமயத் தலைவர்களின் அனுபவங்களின்மீது, மாறிவரும் தலை முறைகளின் போக்கைக் கொண்டு அந்தந்த சமயங்களின் நம்பிக்கைகளும், வழிபாட்டு முறைகளும், சடங்கு முறைகளும் மாறுபட்டு வருகின்றன. இம்மாறுதல்கள் யாவும் அவ்இறைவனை வழிபட, அவனை அடைந்திட அதிக ஆர்வத்தினை உண்டாக்கவே செய்கின்றன. இவ்வுண்மைக்குச் சான்றாக மேலை நாடுகள் ஆன்மீக தாகத்திற்காகக் கீழை நாடுகளின், குறிப்பாக இந்தியாவின் சமயக் கருத்துக்களிலும், வழிபாட்டு முறைகளிலும் அதிக கவனம் செலுத்தப்படுவதன்மூலம் அறிந்தின்புறலாம. ஆனால் இன்று நம்மில் எத்தனைப் பேர் நமது சமயத்தைப் பற்றித் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கின்றோம். தனது ஜாதியினுடன வைத்திருக்கும் பிணைப்பில் நூற்றில் ஒரு பத்து சதவீதம் கூட நாம் நம் சமயத்துடன் வைத்துக் கொள்ளவில்லை. ஏன், தான் ஒரு இந்து என்று கூறிக் கொள்வதிலும் சிறிது தயங்குவதாகத் தெரிகின்றது. இது வறட்சியின் விரட்டலால் வந்த வினையைக் காட்டிலும், நாகரிக மோகத்தால் பெற்ற பேறு என்றே சொல்லலாம்! நமது கலாசாரம், இனம், மொழி ஆகியவற்றின் பெருமையைப் பறைச் சாற்றுவது நமது இந்து சமயமே. உலகில் உள்ள எல்லாச் சமயக் கருத்துக்களையும் தன்னுள் கொண்டு, மற்றைய சமயங்களுக்கு வழிகாட்டியாக இருந்து, வேதங்களின் பெருமை, இதிஹாஸ புராணங்கள் விளக்கிடும் தத்துவ, ஆன்மீகக் கருத்துக்களின் அருமை, சிந்தனையாலும், செயலாலும் உயர்ந்து விளங்கிய மெய்யடியார்களின் சிறப்பு, காலத்தாலும் அழிக்க முடியாத சமய இலக்கியங்களின் சீர்மை ஆகியவற்றைப் பெற்று விளங்கும் இந்து சமயத்தினைப் பற்றி அறிந்து தெளிந்திடுவோம். அந்த நன்னாளை விரைவில் நாம் அடைந்தால் அன்னாளே நாம் உண்மையான சுதந்திரம் பெற்ற பொன்னாளாகும்.

# தி. தி. தேவஸ்தான மேலாண்மை முடிவுகள்

அண்மையில் திருப்பதியில் கூடிய தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுக் கூட்டத்தில் சில முக்கிய முடிவுகள் எடுக்கப்பட்டன. திருமலை அடிவாரமான 'ஸ்ரீவாரி மெட்டு' எனும் இடத்திலிருந்து (சந்திரகிரி அருகில்) திருமலைக்கு 'கயிற்று வழி' பாதை ஒன்று அமைப்பது பற்றி விவாதிக்கப்பட்டது. இது சம்பந்தமாக இரயில்வே இலாகாவின் பொறியியல் துறையினரின் அறிக்கையினைப் பெற்றபின் பல கோடி ரூபாய் பெறுமான இத்திட்டத்திற்கான 'டெண்டர்கள்' பெறப்படும். இக்கயிற்று வழிப்பாதை அமைப்பதற்காக வெளி நாட்டு நிறுவனங்கள் உள்ளிட்டு சுமார் 10 நிறுவனங்கள் திட்ட அறிக்கைகள் சமர்ப்பித்துள்ளன.

ஃ ஃ ஃ

வெளி நாட்டில் கோயில்கள் கட்டுவதற்கென தி. தி. தேவஸ்தானம் நிதி உதவி அளிக்கும் செய்தி யாவரும் அறிந்ததே. இவ்வகையில் இதுவரை இல்லினுயிஸ், மிச்சிகன், நியூசௌத் வேல்ஸ், பிஜி தீவுகள, ஃபோர்ட் லாயிஸ் போன்ற அயல்நாட்டுப் பகுதிகளிலிருந்து அவ்வவ்கோயில் குழுக்களிடமிருந்து நிதி உதவி கோரி மனுக்கள்வந்துள்ளன. இம்மனுக்களைப் பரிசீலிப்பதற்கென, தனிக்குழு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

திருப்பதி நகரத்தில் ஜன நெருக்கடியினையும், வாகன நெருக்கடியினையும் தவிர்க்கும் வகையில், ரூ 50 இலட்சம் செலவில் திருப்பதி பெங்களூர் நெடுஞ்சாலையின் சித்தூர் சாலையிலிருந்து திருமலை அடிவாரம் வரை சுற்றுப்பாதை ஒன்று போடப்படும்.

ஃ ஃ ஃ

வருடம் ஒன்றிற்கு ரூ 1.5 இலட்சம் ரூபாய் செலவினை ஏற்கும் வகையில், திருப்பதியில் முதல் வகுப்பு மாஜிஸ்டிரேட் மன்றம் ஒன்றினை ஏற்படுத்தி, அதற்கான இடவசதியினையும் செய்து தருவதென்றும் தி. தி. தே. மேலாண்மை முடிவு செயதுள்ளது.

ஃ ஃ ஃ

ஸ்ரீ திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கு அருகில் ரூ. 40 இலட்சம் செலவில் பெரிய கட்டிடம் ஒன்றினை தி. தி. தேவஸ்தான மத்திய நூலகம் மற்றும் ஆய்வு நிலையத்திற்காகக் கட்டப்பட உள்ளது.

ஃ ஃ ஃ

ஹரித்துவார் சப்த ஸரோவரில் பத்ரகாளி பீடத்தினை ஏற்றுக் கொள்வதென்றும், தென்னிந்திய யாத்திரிகர்களுக்கு உதவி புரிந்திடும் வகையில், புவனேஸ்வரில் சத்திரம் ஒன்றினைக் கட்டுவதென்றும், மேலும் அங்கு தி. தி. தே. தகவலறிவிப்பு நிலையம் ஒன்றினை அமைப்பதென்றும் குழு முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

ரூ. 20 இலட்சம் செலவில் மேற்கு கோதாவரி மாவட்டத்தில் சாரிபல்லி எனும கிராமத்தில் திருமண மண்டபம் ஒன்று கட்டப்படும்.

ஃ ஃ ஃ

திருப்பதியில் நான்கு திருமணக் கூடங்கள் அடங்கிய ஒரு பெரிய கட்டிடத் தொகுதி ரூ. 84 இலட்சம் செலவில் கட்டப்படும்.

ஃ ஃ ஃ

காக்கி சீருடை தரிக்க வேண்டிய தி. தி. தேவஸ்தான ஊழியர்களுக்கு (4-ம் வகுபபு பிரிவினர்) இனி மேற்கொண்டு டெர்ரிகாட்டன் காக்கி சீருடை வழங்கப்படும். ஒவ்வொரு வருக்கும் 6.3 மீட்டர் நீளம்கொண்ட இச்சீருடை வழங்கப்படும் ஒவ்வொரு முறைக்கும்தி.தி.தே.மேலாண்மைக்கு ஆகும் செலவு ரூ.5 இலட்சம் ஆகும்]

ஃ ஃ ஃ

திருப்பதி அலிபிரி மலையடி வாரத்தில் 224 அறைகளைக் கொண்ட ரூ. 1.5 கோடி செலவில் 3 சத்திரங்கள் கட்டப்படும். திருமலையில் 320 அறைகளைக் கொண்ட ரூ. 2 கோடி செலவில் சத்திரம் ஒன்றும் கட்டப்படும். இதற்காக ஒவவொரு அறைக்கும் ரூ. 62,500/- பொது மக்களிடமிருந்து நன்கொடையாக வசூலிக்கப்படும்.

ஃ ஃ ஃ

ஆந்திர மாநிலத்தில் 50 கிராமங்களில் இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா ஆதரவில் வழிபாட்டுக் கூடங்கள் கட்டப்படும். ஒவ்வொரு கூடமும் ரூ. 50,000 செலவில் கட்டப்படும்.

ஃ ஃ ஃ

## எங்கள் கண்ணோட்டத்தில் ....

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் (ஆகஸ்ட் '84 இதழ்) ரூ 1-50

கிருஷ்ண ஜெயந்தி சிறப்பிதழாக வெளி வந்திருக்கும் இம்மாத இதழ், எப்பகுதி சுவைத்திடினும் இனித்திடும் கற்கண்டுக்கு ஒப்பாக விளங்குகிறது. சிறியோர்க்கும பெரியோர்க்கும் உற்ற துணையாக அமையும் இவ்இதழில் இடம் பெற்றுள்ள ஆன்மீக வினா-விடை, விநாயகர் பெருமை ஆகியவற்றைத் தாங்கிய பக்கங்களும், கடவுளர் புகைப் படங்களும் சித்திரங்களும் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாகஅமைந்துள்ளன. ஒவ்வொரு இந்துவும் இம்மாத இதழைப் படித்துப் பயனுறுதல் அவசியம்.



ஸ்ரீமத் தியாகராஜ சுவாமிகள்



ஸ்ரீமத் வேங்கடரமண பாகவதர்

# நௌகா சரித்திர காவ்யம்

திரு கே. ஆர். கிருஷ்ணமாச்சாரி—தாராபுரம்

ஸங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான ஸ்ரீமத தியாகராஜ ஸவாமிகள் பிரஹ்லாத பகதி விஜயம், சீதா ராம விஜயம், நௌகா சரித்திரம் எனும மூனறு ஸங்கீத நாடகங்களை இயறறியுள்ளார். இதில நௌகா சரிததிர காவ்யததிற்கு பாகவதத்தில ஆதாரமொனறும இல்லை தெலுங்கு பாஷையிலுள்ள போதனு கவி இயறறிய பாகவதததைதத தினமும் பாராயணம் செய்து வரும் வழக்கத்தைக் கொண்டிருந்த ஸ்வாமிகள், கிருஷ்ண பகதியை அடிப்படையாகக் கொணடு கிருஷ்ணாவதாரத்தின கருத்தை விளக்கும் வகையில் சிருஷ்டித்த காவியமே இது.

பூரண நிலவொளியில் கணணன கோபியாகளுடன் ஓடலீலை செய்து பின கோபியர்களின் அகந்தையை அடக்கி அவர்களுககு அருள் பாலித்து ஆட்கொள்ளும் நிகழ்ச்சியின் சிததரிப்புதான இக்காவியமாகும்

தெலுங்கு மொழியில் தியாகராஜர் இயற்றிய இக்காவியததை அனனாரின் பிரதம சிஷ்யரான ஸ்ரீமத வேங்கட ரமண பாகவத ஸ்வாமிகள ஸம்ஸ்க்ருதத்தில் உரை நடை வடிவில் எழுதியுள்ளாா. பின் பாகவதரின் சிஷ்யரான ஸ்ரீமத் கவி வேஙகட சூரி ஸவாமிகள வடமொழியில் செயயுள் வடிவில் எழுதினா அதைதத தொடாநது சூரி ஸவாமிகளின சிஷயரான புட்டா அழகரார்யர் ஸௌராஷட்ர மொழியில் 'பஞசல் சரித்ரு' எனும தலைப்பில மொழி பெயர்ததுளளார்



ஸ்ரீமத் கவிவேங்கடசூரி ஸவாமிகள்



புட்டா அழகரார்யர் ஸ்வாமிகள்

# கந்தரலங்காரத்தில் திருமால்

முருகப் பெருமானின் அருள் பெற்று சந்தப்பாடல்களைப் பாடிக் குவித்தவர் அருணகிரிநாதர். முருகனைக் குழந்தையாக, சேனாதிபதியாக, வள்ளி தெய்வயானை மணாளனாக, மன்றாடி மைந்தனாக, கல்யாணியின் புதல்வனாக, ஆனைமுகன் தம்பியாக பல பாடல்களில் புகழ்ந்து பாடியுள்ளார். அவர் பாடியுள்ள கந்தரலங்காரத்தில் பல இடங்களில் முருகனை 'மாலோன் மருகனே' எனவும் விளித்துக் களிக்கிறார். முருகனுக்கு மாமனாகிய திருமாலின் அவதாரங்களில் சிலவற்றையும் தமது பாடல்களில் அழகுற அமைக்கிறார் அருணகிரியார்.

'மயிலிலும், தேவர்கள் தலையிலும், என்னுடைய ஏட்டிலும் பட்டது முருகனின் சிற்றடி'' என்று சொல்லும் பாடலில் முருகனை ''மாபலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி பூமியை யாசித்து, அண்ட கூடத்தின் உச்சியையும் முட்டும்படி தனது சிவந்த திருவடியை நீட்டிய பெருமானது மருகன்'' என்கிறார்.

'' தாவடியோட்டு மயிலிலும் தேவர்
தலையிலுமென்
பாவடியேட்டிலும் பட்டதன்றோபடி
மாவலிபால்
மூவடி கேட்டன்று மூதண்டகூட
முகடுமுட்டச்
சேவடிநீட்டும் பெருமான்
மருகன்றன் சிற்றடியே ''

எனும் அப்பாடலைப் படிக்கும் பொழுது திருமாலின் 'வாமன அவதார' மகிமையையும், அத்தகைய மாலின் மருகனின் திருவடிப் பெருமையையும் அருணகிரியார் ஒருங்கிணைத்துப் பாடிய அழகு புலப்படும்.

''முருகன், மதயானையைப் போன்ற வலிமையும், இருபது கைகளையுமுடைய இராவணனின் தலைபத்தும் விண்டு விழுமாறு அம்பெய்தியவனின் மருகன்'' என்று கூறி மகிழ்கிறார்.

'' .... வெய்ய வாரணம்போற்
கைதா னிருபதுடையான் தலைபத்தும்
கத்தரிக்க
எய்தான் மருகன ''

எனும் வரிகளில் அதனைக் கவினுறப் பாடுகிறார். இப்பாடலில் இராமவதாரம் சொல்லப்படுகிறது.

' முருகா! பிறப்பு இறப்பு இரண்டும் தீர்த்து உன்னில் ஒன்றிய என்னைக் கொள்ளும் காலமுண்டோ?'' எனும் பொருள்கொண்டு அமையும் பாடலில் முருகனை,

' . வெற்பு நட்டுரகம்
பதித்தாம்பு வாங்கிநின் றம்பரம்
பம்பரம் பட்டுழல
மதித்தான் திருமருகா! மயிலேறிய
மாணிக்கமே! ''

என்று மனமுருகி அழைக்கிறார். இப்பாடலில், வாசுகி எனும் பாம்பை கயிறாக்கிப் பாற்கடலைத் திருமால் கடைந்த நிகழ்ச்சி கூறப்படுகிறது.

மற்றொரு பாடலில் அரவணையில் அறிதுயிலும் திருமாலைக் காண்கிறோம். காற்றையே உணவாகக் கொள்ளும் கால் இல்லாத ஆதிசேடன் எனும் பெரும் பாம்புப் படுக்கையிலே திருமால் சயனித்துள்ளார். இதனை,

'' காலே மிகவுண்டு காலே யிலாத
கணபணத்தின்
மேலே துயில்கொள்ளு மாலோன்..'

எனும் வரிகளில் பாடுகிறார். கால், காற்று எனும் இரு பொருள் உண்டாகுமாறு 'காலே' எனும் சொல் படைத்த அருணகிரியாரின் கவியழகு எண்ணி இன்புறத் தக்கதாகும்.

''கவியாற் கடலடைத்தோன் மருகோன'' என்று முருகனைச் சொல்லி குரக்கினத்தின் உதவியால் இராமன் இலங்கைக்குச் செல்வதற்குக் கற்பாலமிட்ட செய்தியை 43-ம் பாடலில் கண்டு மகிழ்கிறோம்.

**திரு M S. பாலசுப்பிரமணியன், சென்னை-15.**

பிறிதொரு பாடலில், கிருஷ்ணாவதாரத்தில் நடைபெறும் காளிங்க நர்த்தனம் சொல்லப்படுகிறது. காளிங்கன் எனும் பெரிய அரவின் படத்தின்மீது கிருஷ்ணன் நடமாடுகிறான். இதனை,

'' பெரும் பாம்பில் நின்று நடிக்கும்
பிரான் ''

என்று அருணகிரியார் பாடுகிறார்.

இலங்கைக்கு வழிகாட்டுமாறு கூறி கடலும் கூட நெருப்புப் பற்றுமாறு தனது கோதண்டத்தை இராமன் வளைத்த நிகழ்ச்சியை,

'' .. . . இலங்காபுரிக்கு
போகைக்கு நீவழி காட்டென்று
போய்க்கடல் தீக்கொளுந்த
வாகைச் சிலைவளைத்தோன் ...... ''

எனும் வரிகள் மூலம் அறிந்து களிக்கின்றோம்!

'' கருமான் மருகனை செம்மான்
மகளைக் களவுகொண்டு
வருமா குலவனை ''

என்ற பாடலில் ''கருமான்'' எனும் சொல் கரிய நிறத்தினை உடைய திருமாலையே குறிக்கும்.

திருமாலின் மேல் பகைமை கொண்டு இரணியாக்ஷன் என்பான் பூமியைக் கடலில் எறியுங்கால் வராகமாய்ப் பேருருத்தாங்கி தனது கோட்டினால் உலகை நிலைநிறுத்துகிறார் திருமால். இந்நிகழ்ச்சியை ''பெருநிலஞ் சூகரமாய் கீன்றோன'' எனும் சொற்களில் அமைக்கிறார் அருணகிரியார்.

மாலோன் மருகனாக முருகனை அழைக்கும் ஒவ்வொரு பாடலிலும் திருமாலின் அவதார நிகழ்ச்சிகளைச் சேர்த்து அவருக்கு அருணகிரிநாதர் புகழ்மாலை சூட்டுவது எண்ணுந்தொறும் இன்பம் பயப்பதாகும்.

இராமவதாரம், கிருஷ்ணாவதாரம், வாமன அவதாரம், வராக அவதாரம் எனும் இவ் அவதாரங்களில் ஏற்படும் சில நிகழ்ச்சிகளோடு திருமாலின் அறிதுயிலையும் அருணகிரிநாதரின் சந்தத் தமிழில் இயன்ற கந்தரலங்காரத்தில் கண்டு உவக்கிறோம் ★

# ★ பீஷ்மரின் தனிப்பெருமை ★

1. **महिषी** - என்பவள் பட்ட மகிஷீயாவாள். அரசனுக்கு ஸகல விதத்திலும் சரிநிகர் சமானமாக சிம்மாஸனத்தில் அமரும் உரிமை பெற்றவள். அரசர்களுக்கு மனைவியர் பலர் இருப்பது (அந்தக் காலத்தில்) சர்வ சாதாரணம். அவர்களுள் யாராவது ஒருத்திக்குத்தான் இந்த கௌரவம் கிடைக்கும்.

2. **वावाता**-என்பவள் அரசனுடைய பரிபூர்ணமான அன்புக்குப் பாத்திரமான ஆசைநாயகி. அரசன் விஷயத்தில் இவள் இட்டது சட்டம். இவளை மீறி எதையும் அரசன் செய்ய முடியாது. அவ்வளவு செல்வாக்கு இவளுக்கு. அனேகமாக இளையவளான மனைவியே இப்படி இருப்பாள். **वात** - என்பது காற்றுக்குப் பெயர். **वावाता**= என்றால் 'இடையறாது ஸர்வ காலமும் வீசும் காற்று போன்றவள்' என்று பொருள். இங்குக் 'காற்று' என்னும் சொல் அளவு கடந்த பாசத்தைக் குறிக்கும். அது எப்பொழுதும் குறைவு படாமல் ஒரே ரீதியில் இவளிடம் அரசருக்கிருக்கும். பழங்காலத்துக் கல்யாணங்களில் மணமகன் மணமகளை ஔபாஸனத்துக்கு வரும்படி அழைப்பது வழக்கம். அனுபோகமுள்ள பெண்மணிகள் சூழ்ந்து கொண்டு ஆத்த புஷ்டியான வார்த்தைகளை அவனுக்குச் சொல்லிக் கொடுத்து, அவன் வாயால் அந்தச் சொற்களைச் சொல்லி அழைக்கும்படி சொல்வார்கள் "இளையாள் முகமே! இடைக்கட்டு வாசற்படிக்கு வாற்றே!" என்பதுவும் அவற்றிலொன்று. இந்த **वावाता** என்னும் பெயரின் திரிந்த வடிவமே இது என்னலாம்.

3. **परिवृक्ती** - என்பவள் அரசனை முறைப்படி மணந்து கொண்ட மனைவியானாலும் அவனது ஆதரவில்லாமல் விலக்கி வைக்கப்பட்டவள். இப்படியும் சிலர் இருப்பது அக்காலத்தில் சகஜமே. **परि व र्जनम्** - என்னும் சொல் "கை விடுதல்" என்னும் பொருள் கொண்டது. அதன் வடிவமே **परिवृक्ती** என்பதாம்.

தசரதச் சக்ரவர்த்தி அஸ்வமேத யாகம் பண்ணினபோது 'மகிஷீ' என்னும் பதவியில் 'கௌஸல்யா' இருந்தாள். 'வாவாதா'வாக 'கைகேயி' இருந்தாள். 'பரிவ்ருக்தீ'யாக 'ஸுமித்ரை' இருந்தாள்.

होताध्वर्यु स्तथोद्गाता हयन समयो जयन् ।
महिष्या परिवृक्तयाथ वावाता मपरा तथा ॥

(ஸ்ரீமத் ராமாயணம் பாலகாண்டம். 13-28) இந்த மூன்று மனைவியருக்கும் தனித்தனியாக அச்வமேத யாகத்தில் பற்பல காரியங்களுமுண்டு. அவற்றையெல்லாம் ஒரு 'பொன் ப்ரதிமை' செய்ய முடியாது.

न सीतायाः पराभार्यां वव्रे स रघुनन्दनः

என்னும் ராமாயண ச்லோகம் முன்னமே காட்டப்பட்டது. 'சீதையைத் தவிர வேறு மனைவியை இராமன் மணந்து கொள்ளவில்லை' என்னும் கருத்து இதிலுள்ளது. ஊன்றிக் கவனித்தால் ஒரு விசேஷம் புலனாகும். 'न वव्रे' என்பதற்கு 'மணந்து கொள்ளவில்லை' என்று பொருள் இல்லை. "வரிக்கவில்லை" என்பதுதான் அதன் பொருள். வரிப்பதாவது = ஆசை நாயகியாக ஏற்றுக் கொள்வது = என்பதாம். இந்த ரீதியில் இராமனுடைய மனத்தில் சீதை மட்டுமே இடம் பெற்றவள். இதையே மேற்படி ச்லோகம் தெளிவுபடுத்துகிறது. யாகம் முதலான தர்ம காரியங்களுக்கு அத்யாவச்யகமான ஸஹதர்மசாரிணியாக வேறு பெண்களை மணந்து கொண்டிருப்பதை இந்த ச்லோகம் 'இல்லை'யென்னாது.

अथवा न हि तस्यार्थो धर्मकामस्य धीमतः ।
मया रामस्य राजर्षेः भार्यया परमात्मनः ॥

(ஸ்ரீமத் ராமாயணம் சுந்தர காண்டம் 25-40)

இது சீதையின் வார்த்தை. 'அவர் (இராமன்) தர்மத்தில் ஊன்றி நிற்பவர். பரமாத்மா. க்ஷத்ரியர்களுள் சிறந்தவர். என்னையே மனைவியாகக் கொள்ள வேண்டிய நிர்பந்தம் அவருக்கில்லை' என்பது கருத்து. இலங்கையில் திக்கற்ற நிலையில் பரிதபிக்கும் தன்னை, இராமன் வந்து மீட்கவில்லையே என்னும் ஏக்கத்தால் உள்ளம் குமுறின நிலையில் சீதை இப்படிப் பேசுகிறாள்.

पितुर्निदेशं नियमेन कृत्वा वनान्निवृत्तश्चरितव्रतश्च । स्त्रीभिस्तुमन्येविपुलेक्षणाभिस्त्वं रंस्यसे वीतभयः कृतार्थः ॥

(ஸ்ரீமத் ராமாயணம் ஸுந்தர காண்டம் 26-14

நாவல்பாக்கம் ஸ்ரீ தேவநாதாச்சாரியர்,
திருப்பதி

இதுவும் சீதையின் வார்த்தையே தான்.

"தந்தையின் கட்டளையை முறை தவறாமல் செய்து முடித்து விட்டு, காட்டிலிருந்து அயோத்தி மாநகருக்குத் திரும்பிப் போய், அழகிய கண்களுள்ள பெண்கள் பலருடனும் இன்பமான வாழ்க்கையை நீ நடத்தப் போகிறாய்" என்பது கருத்து. இலங்கையில் மனம் நொந்து போன நிலையில் இராமனை விளித்துச் சொல்லும் வார்த்தை. குமாரிலபட்டர் இவற்றையெல்லாம் உற்றுக் கவனித்த பிறகேதான் கீழே காட்டியபடி சொல்லியிருக்கிறார்.

இனி பீஷ்மர் விஷயத்தில் இழிவோம். மகாபாரதக் கதையில் பஞ்ச பாண்டவர்களுள் மூத்தவர் "யுதிஷ்

டிரர்'' இது இவருக்கு இட்ட பெயர். மற்றும் இரண்டு பெயர்கள் இவருக் குண்டு. ''தர்ம புத்திரர்'' ''அஜாத சத்ரு'' என்பனவே அவை. தர்மமே வடிவெடுத்தாற் போன்றவர். 'பகை வனே இல்லாதவர்' என்பது முறையே அவற்றின் பொருள். இந்த ''தர்ம புத்திர''ருக்கும் தர்மங்களைத் தெரிந்து கொள்வதில் ''தாகம்'' அதிகமிருந்தது. பாரதப் போர் முடிந்ததும், ரணக்களத்தில் 'குற் றுயிர் குறையுயி'ராகக் கிடந்த பீஷ் மரை அணுகி, 'ஸகல தர்மங்களையும் உபதேசிக்க வேணு'மென்று கேட் டார் இவர். சரதல்பத்தில் கிடந்து சொல்லொணாத வேதனைகளை அனு பவித்துக் கொண்டிருந்த நிலையிலும் பீஷ்மர் இவருடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்தார். சாந்தி பர்வம் அனுசாஸன பர்வம்-எனனும் பிரம மாண்டமான இரண்டு பர்வங்களும் தர்மபுத்திரருக்கு பீஷ்மர் செய்த உபதேசங்களே. தர்மபுத்திரர் ஒரு வருக்குத் தவிர இத்துணை தாகம் வேறு எவருக்குமில்லை. அதைத் தணிக்கும் சக்தி பீஷ்மரைத் தவிர வேறு எவருக்கும் இல்லை. அவர் தலை மறைந்துவிட்டால தாம ஸூக்ஷ் மங்களைத் தினவடங்க எடுத்துக் கூறும் ஆற்றல் படைததவர் வேறு எவருமில்லையே! எனனும் காரணத் தால்தான் தர்மபுத்திரா அவருடைய கடைசி காலத்தில் அவசர அவசர மாய் நுட்பமான தர்மஙகளைக கேட் டார். இப்படி ஆர்வத்துடன் கேட் பவனுக்குச சொல்லாமல் போவது தகாது என்ற காரணத்தினால்தான் பீஷமரும், தனது வேதனையை யெல் லாம் சகித்துக் கொண்டு விரிவாக உபதேசித்தார். பீஷ்மருக்கு தர்ம விஷயத்தில் ஈடு இணையில்லாத அறிவு, தர்மத்தை அனுஷடிப்பதி லும் நிகரற்றவர் பீஷ்மா. பிறருக்கு மட்டும விரிவாக உபதேசம் செயது விடடு ஸவானுஷ்டானததில் முழுப் பூஜ்யமாக இருப்பவரில்லை இவர். இது நாடு நகரமும் நன்கறிந்ததே. இப்படிப்பட்ட பரம தார்மிகரான பீஷமர், மனைவியில்லாமல் சாஸ்திர விரோதமாக யாகம் பண்ணியிருப் பாரா? என்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேணும்.

மற்றுமொரு விஷயம் இங்கு கவ னிக்கப்பட வேணும். பீஷ்மருடைய தந்தை சந்தனு மகாராஜன். அவர் இறந்த பிறகு பீஷ்மர் பிரதி வருஷம் அப்பாவின மரண தினத்தில் ச்ராத் தம் செய்து வநதாா. ஒரு வருஷம் அதிசயமான நிகழ்ச்சி யொன்று நடந்தது. பீஷ்மர் உறுதியான மனத் துடன அதை நிர்வகித்து விட்டார்.

சராத்தம் முடியும் தறுவாயில் ''பிண்டப்ரதானம'' என்பது ஒரு சடங்கு. தெறகு நுனியாக தர்பங் களைப் போட்டுத் (வெறும தரையில்) தனது பிதாவின் பெயரைச் சொல்லி ஒரு பிண்டத்தை அதன் மேல், ச்ராத் தம பண்ணுகிற பிள்ளை வைகக வேணும். பாட்டனுர் கொள பாட் டனுர், தாயார் - பாட்டி - கொள் பாட்டி-இவாகளுக்கும் இப்படியே செய்ய வேணும். ஒவ்வொருவருக் கும் பிண்டம் வைக்கும்போது, அவரு டைய கோத்ரம், பெயர் இவைகளைச் சொல்லி—(விளித்துச் சொல்லி) பிண் டத்தை வைக்க வேணும். சம்பந்தப் பட்டவர்கள் நம்முன் இல்லாத நிலை யிலும், நாம் விளித்துச் சொல்லியே இதைச் செய்ய வேணும். வேதோக்த மான யாகங்கள் பலவற்றிலும் இம் முறையே பினபற்றப்பட்டு வரு கிறது. நமக்கிருக்கும் பக்தி சிரத் தைகளைப் பார்த்து, தெய்வத் தன் மையை அடைந்துவிட்ட பிதா முதலியவர்கள், நமது பார்வைக்கு இலக்காகாமலே வந்து நமது காணிக் கையை ஏற்றுக் கொள்வதாக சாஸ் திர விச்வாஸ முள்ளவர்களது தீர்ப்பு.

பீஷ்மருடைய விஷயத்தில் இவ் விஷயம் விபரீதமாக மாறிவிட்டது. பிண்டத்தைக் கையில் எடுத்துக் கொண்டார் பீஷ்மர். பூமியில் முறைப்படி தர்பங்கள போடப்பட் டிருந்தன. அவற்றின் மேல் வைப் பதற்காக, ' என் அருமைத் தந்தை யாகிய சந்தனு மகாராஜரே!'' என்று

(41-ம் பக்கம் பார்க்க)

# வாதாபி கணபதி

திருச்செஙகாட்டங்குடியில் உள்ள விநாயகக் கடவுளின் திரு நாமம் ''வாதாபி கணபதி'' ஆகும் இத்திருத்தலம் தமிழ்நாட்டில் தஞ்சை மாவட்டத்தில நன்னிலத்தருகே உளளது. முன்பு ஒரு காலத் தில் விநாயகக் கடவுள கயமுகாசுரனை இங்கு வெட்டி வீழத்த அவனது இரத்தம் வெள்ளப் பெருக்கெடுத்து ஒடியது என்றும அது காரணத் தால் ''திருச்செங்காடு'' என அழைககப்பட்டு பினபு திருச்செங்காட் டங்குடி என மருவியது என்பர். விநாயகக் கடவுள் அசுரனைக் கொன்ற பின் இங்கு சிவலிங்கத்தை ஏறபடுத்தி வழிபட்டார் எனபது வரலாறு கூறுவதாகும். விநாயகக் கடவுள ஏறபடுத்திய காரணத்தால் இத் திருக்கோயிலுக்கு ''கணபதீச்சரம்'' என்ற பெயர் ஏற்பட்டது என்றும் கூறுவர் பிற்காலத்தில் சிறுத்தொண்ட நாயனர் படையுடன சென்று வட நாட்டில உள்ள ''வாதாபி'' எனனும் நகரிலிருந்த விநாயகரைக் கைப்பற்றி இஙகுக் கொண்டு வநது வழிபட்டதால ''வாதாபி கணபதி'' என்னும் பெயா ஏற்பட்டது என்பர். இசைக்கு முதற்கடவுள் வாதாபி கணபதி என்று வழங்குவர். இத்திருத்தலத்து விநாயகரை வழிபட்டு இசையிற் சிறந்தவர்கள பலர் உண்டு.

ஆதாரம: ''நாயனர் புராணம்''

தகவல்: முடிவை முத்து.

# கோலக் கோபுரக் கோகர்ணம் காண்மின்!

தேவலோகத்தில் தேவேந்திரனுடைய திருச்சபை கூடிய போது, ஒரு முறை தேவர்கள் அனைவரும் குறித்த நேரத்தில் வருகை புரிய, காமதேனுப் பசு மட்டும் காலங்கடந்து வந்தது. எனவே தேவேந்திரன் சினம் கொண்டான். காமதேனு செய்த பிழைக்காக அதனைப் பூலோகத்தில் சென்று காட்டுப் பசுவாக பிறக்கும்படி சாபமிட்டான். தேவேந்திரனின் சாபப்படி காமதேனு பசுவாகப் பிறந்து கபில முனிவரின் அருளுபதேசப்படி நாள் தோறும் புனித கங்கை நீரை தனது இரு காதுகளிலும் நிரப்பிக் கொண்டு வந்து திருக்கோகர்ணம் என்று அழைக்கப்படும் வகுளாரணயப் பெருமானைப் புனித நீராட்டி வழிபட்டு வந்தது. இப்பகுதி முன் காலத்தில் மகிழ ஆரணயம் அல்லது வகுளாரணயம் என்றும், இங்குள்ள சிவபெருமான் வகுளாரண்ய பெருமான் என்றும் பெயர் பெற்று விளங்கி வந்துள்ளார். கங்கை நீரைப் பசு சேமித்து வைத்த இடமே இன்று மங்கள தீர்த்தம் என்றழைக்கப்படும் கங்கா தீர்த்தம் ஆகும். இத்தலத்தில் பசு கன்று ஒன்றை ஈன்றதாகவும் சொல்லப்படுகிறது. பசுவின் பக்தியைச் சோதிக்கவும் உலகுக்கு பக்தியின் சிறப்பை எடுத்துக் காட்டவும் சிவபெருமான் திருவுளம் கொண்டு, கங்கை நீரைக் காதுகளில் ஏந்திவரும் பசு செல்லும் ஒரு வழியில் புலி உருக்கொண்டு எதிர்ப்பட்டு பசுவைக் கொல்லவும் முற்பட்டார். பசு, தான் நாள் தோறும் செய்ய வேண்டிய புனித நீராட்டும் பணியை முடித்து தனக்காகக் காத்திருக்கும் தன் கன்றுக்குப் பால் ஊட்டி விட்டு புலியிடம் திரும்பி வருவதாக உறுதி கூறிவிட்டுச் சென்றது. அவ்வாறே தன் நித்திய கடமையை முடித்து விட்டுப் பசு குறிப்பிட்ட இடத்திற்குத் திரும்பி வந்தது. பசுவின் பக்தியையும் கடமை உணர்வையும், வாக்கினைக் காக்கும் பண்பையும் கண்டு வியந்து, சிவபெருமான் தன் புலி உருவத்தை மாற்றி, தனது இயற்கை உருவுடன், இடபவாகனத்திலிருந்து காமதேனுப் பசுவிற்கு காட்சி கொடுத்து, முக்தியும் தந்து மறைந்தார்.

இவ்வாறு இறை வழிபாட்டில் தினமும் ஈடுபட்ட பசு தனது காதுகளில் கங்கையின் புனித நீரைக் கொண்டு வந்து சிவபெருமானுக்குப் புனித நீராட்டி வழிபட்ட காரணத்தினால்தான் இத்தலத்திற்கு "கோகர்ணம் - திருக்கோகர்ணம்" என்ற பெயர் வழங்கலாயிற்று.

இங்ஙனம் பசுவைச் சோதிக்க புலி உருக்கொண்டு ஈசன் தோன்றி, பசுவிற்குக் காட்சி கொடுத்த இடமே திருவேங்கை வாசல் என்று அழைக்கப்படும் திருத்தலமாகும். இது திருக்கோகர்ணத்திலிருந்து வடமேற்கில் சுமார் 5 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இங்கு உள்ள திருக்கோவிலில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் பெயர் 'வேங்கை நாதர்'. இங்குள்ள மூலலிங்கம், புலி முகமுடன் திகழ்கிறது. அம்மன் திருப்பெயர் பெரியநாயகி நாச்சியார். இத்தலத்திற்கு உரிய மரமும் (தல விருட்சம்), திருக்கோகர்ணம் கோவிலுக்குரிய அதே மகிழமரம்தான். இக்கோவிலுக்குரிய வழிபாட்டிற்கும், நந்தவனத்திற்கும், பிற அறச் செயல்களுக்கும் சோழ பாண்டிய மன்னர்களால் பல்வேறு மானியங்கள் வழங்கப்பட்டன. இது தொடர்பான 21 கல்வெட்டுக்கள் இத்திருக்கோவிலில் பலவேறு பகுதிகளில் காணக்கிடக்கின்றன.

"கோலக் கோபுரக் கோகர்ணம் சூழாக் கால்களாற் பயனென்ன!"

என்று அப்பர் அடிகள் அருளியவாறு அனைவரும் கண்டு ஆனந்திக்கும் அரிய தெய்வத் திருத்தலம் திருக்கோகர்ணம் ஆகும். மூர்த்தி, தலம், தீர்த்தம் என மூன்றிலும் பெருமை கொண்ட தலமிது. கங்கா தீர்த்தம், மங்கள தீர்த்தம் என்னும் புண்ணிய தீர்த்தங்களைக் கொண்டது இத்தலமாம். உயர்ந்த கோபுரங்கள், கவின் மிகு சிற்பங்கள் ஒருங்கே அணி செய்யும் பெற்றி பெற்றதும், மலைக் கோவிலும், குகைக் கோவிலும், மாடக் கோவிலும் ஒரு சேர அமைந்து தனிச் சிறப்புடன் திகழ்வதும் இதுவே. புதுக்கோட்டை மாவட்டத்தின் புராதனச் சிறப்பு மிக்க புனிதத் திருத்தலமாக இது அமைந்துள்ளது:

திருமதி. என். ஜெயா B Sc,
ஒரத்தநாடு

இத்திருக்கோவிலின் பிரதான வாயில் தெற்கு நோக்கி உள்ளது. சந்நிதிகள் கிழக்கு நோக்கி அமைந்துள்ளன. கோவிலின் தெற்கு வாயிலில் நுழைந்ததும் மேற்புறம் எழுந்தருளியிருக்கும் வினை தீர்த்திடும் விநாயகப் பெருமான், நம்மைக் கனிவோடு வரவேற்று வழி விடுகிறார். கோவிலை நோக்கி அழைத்துச் செல்லும் நீள மண்டபத்தைப் புதுக்கோட்டை மன்னர்களின் சித்திரங்களும், தலப்பெருமை கூறும் சித்திரங்களும், இராமாயணக் காவியத்தை விவரிக்கும் சித்திரங்களும் அழகு செய்கின்றன. அடுத்து திருமண மண்டபமும், ஊஞ்சல் மண்டபமும் உள்ளன. அவற்றில் உள்ள அரிய வேலைப் பாடமைந்த கல்லில் கவி பாடும் சிற்பங்கள் காண்போர் உள்ளத்தைப் பெரிதும் ஈர்க்கின்றன.

இம்மண்டபத்தின மேற்கில் உள்ள கருவறையில்தான் அன்னை பிரஹ தாமபாள் புன்னகை தவழும் வதனத் தோடும் அருள் பொழியும கண் களோடும அருள்பாலிககக் காத திருககிறாள். அன்னை முன்னே அரிய வேலைப்பாடமைநத பாவை விளககும ஒளியை அள்ளி வீசுகின்றது.

அம்மன் மணடபத்தை விட்டு அகன்று, வலமாகச் சென்றால் அறு பத்து மூன்று நாயன்மார்களின் திரு வுருவங்களையும் அவர்களுக்குக் காட்சியளிதத இடபமேறிய இறை வனின் திருக்கோலத்தையும் காண லாம். மேலும் நேராகச சென்றால் மகேந்திரப் பல்லவன் மலையைக் குடைந்து அமைததுள்ள குகைக் கோவிலை அடையலாம். இககோவி லின் நடுவில் அருள்மிகு கோகர்ணே சுவரரும, தெற்கில் விநாயகரும், வடககிலும் நடுவிலும் கங்காதரரும், பாறையிலேயே குடைந்து நேர்த்தி யாக உருவாக்கப்படடுள்ளனா. இக் கோவில் பல்லவ மன்னன் முதலாம மகேநதிரவர்மனால் (கி.பி. 600-630) அமைக்கப்பட்டதாகக் கருதப்படு கிறது.

குகைக்கோவிலைக் கடந்துவெளியே வந்து மலையை அடைந்தால, கபில தீர்த்தம எனறும், கங்கா தீர்த்தம் என்றும் அழைககப்படும் புண்ணிய தீர்ததம் உள்ள சுனை தென்படுகிறது. காமதேனுப் பசு இறைவனை நீராட்டி வழிபடுவதற்காக தினமும் கங்கை யிலிருந்து தன இருகாதுகளில நிரப்பி வந்த புனித நீரை, பாறையில தன் கொம்புகளால் கீறி அதில் நிரப்பிய தால் கஙகா தீரத்தம் எனும் சிறபபுப் பெயருடன் இது அமைநதது.

சுனையிலிருந்து திரும்பி கோவிலை நோககி வலமாக வநதால், ஆடவல் லான் நடராஜப் பெருமான் அருளுரு வாய் அமைந்துளளதையும், அடுத்து வகுளவனேசுவரி என்றும மஙகளே சுவரி என்றும் அழைக்கப்படும் மங்கள நாயகி தெறகு நோக்கி கோவில் கொணடிருப்பதையும், காம தேனுப் பசுவின குளம்பு பட்ட லிஙக வடிவான மகிழவநேசுவரர் என்றும் மங்களசுவரர் என்றும் வழஙகப் படும மூர்த்தி கிழககு நோக்கி கோவில் கொண்டிருபபதையும் காண லாம். இந்த லிங்கமே இததிருக் கோவிலின புராதன மூாத்தியாகச் சொல்லப்படுகிறது. மேலும கிழக்கே சென்றால் சுக்கிர வார மணடபமும் இததலத்திற்குரிய வகுளமரம் எனற ழைககபபடும மகிழ மரமும் (தல விருட்சம) இருக்கின்றன.

புதுககோட்டை மன்னர் பரம பரையினரால் குல தெய்வமாகப் போற்றப்படும் அருளாளர் சதாசிவப் பிரமேந்திரா சிலையை அருகில் காண லாம். தஞ்சை மாவட்டம் திருவிசை நலலூரில் தோன்றியவர் இந்த அரு ளாளர். மௌன விரதத்தை மேற் கொண்டு பேரின்பப் பேற்றினைகு வழி கண்டவா இந்த சதாசிவப் பிர மேந்திரர் ஆவர். 1738-ம் ஆண்டில் புதுக்கோட்டை மனனராக இருந்த விஜய ரெகுநாத தொண்டமான் திரு வரங்குளம் காட்டில் உலவி வந்த இந்த ஞானியாரைக் காணும் பேறு பெறறார். அப்போது பிரமேந்திரர், "ஐந்தெழுத்து மந்திரத்தை" கானக மணலில் தன் திருககரத்தால் எழுதி மன்னருக்கு உபதேசித்து அருளினார். அன்று முதல் மன்னர் சதாசிவப் பிர மேந்திரருக்கு சீடராகி, அவரைத் தனது ஞான குருவாக ஏற்றுககொண டார். இவரது திருவுருவம் திருகோ கர்ணம் கோவிலில வைத்து வழிபாடு செயயப்பட்டு வருகிறது.

ஆடிப் பூர விழாவில் 4 தேர்கள் பவனி வருவதும், பூர நாளில் வெள்ளி இரதத்தில் அமபிகை பவனி வரு வதும் கண்கொளளக் காட்சியாகும: ஆவணி மூலநாளில் சிவபிரான காம தேனுப் பசுவிறகு புலிவுருவில் வந்து பின் இயல்பான இடபவாகனமேறிய திருககோலததுடன காட்சி கொடுத் தருளிய நிகழ்ச்சியை நினைவு கூர்ந்து ஒரு விழா நடைபெறுகிறது. இவ் விழாவில மரத்தினால் ஆன பசுவும் கனறும் முன்னே வைக்கபபடும. புலி வேடம பூண்ட ஒருவன் கூததாடி வருவான். பிறகு சிவபெருமான இடப வாகனத்தில அமாநது பசுவிறகுக் காடசி தருவாா.

இத்தகைய அருமபெரும் சிறப்புக் களைககொணட திருககோகர்ண நாத ரைக கண்டு நேயாகள் வாழ்வில் பனனலமும் பெறுவார்கள் ஆகுக!

★

## அறிவிப்பு

திருமலையில கல்யாணோற்சவம் போன்ற ஆர்ஜித சேவைகளுக் காக பக்தாகளால் எம ஓ. மூலம் அனுப்பப்படும் தொகையை தி. தி. தேவஸ்தானம் ஏறறுக் கொண்டாலும், அம்முறை சில நிருவாக சிககல களையும், கால தாமததையும் ஏற்படுத்துவதால், பக்தர்கள, அனுப்ப வேணடிய தொகையை டி. டி. (D D) மூலம அனுப்பினால் மேலாண மைக்கு அம்முறை உதவியாக அமையும். மேலும் ஆநதிரா வஙகி மற்றும் சில வஙகிகள் இது போன்று தி. தி. தேவஸ்தானத்தின பெய ரில் வழஙகப்படும டி.டி.களுக்கு எவவிதக் கட்டணமும பெறறுக் கொள்வதிலலை.

# ★ கீதை காட்டும் நல்வழி ★

திரு. டி. கே. நாராயணன், M.Sc., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

## புருஷோத்தம யோகம்

**அத்தியாயம்—15.**

**பகுதி—10.**

நாம் உண்ணும் உணவில் நான்கு வகை தோஷங்கள் அல்லது குறறங்கள் உண்டு.

அவை முறையே ஸ்வபாவ தோஷம, நிமித்த தோஷம, ஆச்ரய தோஷம், ஸவத்வ தோஷம் எனபனவாகும.

1 ஸவபாவ தோஷம் : சில உணவுப்பொருள்கள தங்களது இயற்கைத் தன்மை அல்லது குணஙகள் காரணமாக தோஷம உடையவை. மாமசம, கள், வெஙகாயம, உளளிப்பூடு போன்றவைகூட உடலில் உணர்ச்சிகளைத் தூணடி விடுவதால் ஆன்மசாதகர்களால் தவிர்க்கப்பட வேணடியவையே. ஆசாரம காரணமாக சிலர் வெஙகாயம், பெருஞ்சீரகம், பூடு ஆகியவற்றைத் தவிாப்பதறகுக் காரணம அவற்றில் மருத்துவ குணஙகள பல இருந்தாலும அவை சிற்றின்ப எணணங்களைக் கிளறி விடுபவை என்பதனுலேயே யாகும.

2. நிமித்த தோஷம : தயார் செய்யப்பட்ட உணவு சுத்தமானதுதான். அதில ஏதும தோஷம இலலை. இருந்லாலும் அதில ஈயோ, எறுமபோ, தலைமுடியோ, கலலோ வேறு ஏதாவது பொருளோ கிடப்பின் அது அசுததமாகி விடுகிறது. இது நிமிதத தோஷம எனப்படும்.

3. ஆச்ரய தோஷம : உணவு தயாரிபபவன் அசுததமாகக் காணப்படுகிருன். அவன் கை, மேலெல்லாம அசுததம். பாத்திரங்கள தூய்மையாக இல்லை. உணவு பரிமாறும நபா முகத்தில அன்பு இல்லை; மாருக கோபமும் தாபமும் அங்கே காணப் படுகின்றன. பரிமாறும் கரண்டியோ பாத்திரமோ களிம்பேறிக காணப் படுகிறது. இவற்றின் தோஷம் யாவும் உணவிறகும் வந்து விடுகிறது. இது ஆச்ரய தோஷம் ஆகிறது.

4. ஸவத்வ தோஷம் ; அருமையான அறுசுவை உணவு. சுத்தமான நெய்யில் தயாரிக்கப்பட்டது. பார்த்தாலே நாவில் உமிழ்நீர் ஊறுகிறது. பெரிய பங்களாவின அதிபரான சேட்ஜி மகாத்மாவை அழைதது அவருக்காகவென்று தனியாகத் தயாரிக்கப்பட்ட அந்த உணவை ஏற்குமாறு அன்புடன் வேணடுகிருர். வந்த மஹாத்மாவிறகு சேட்ஜியைப்பறறி எல்லாம் தெரியும். எந்த நோககத்துடன் அந்த சேட்ஜி தன்னை அழைத்து உணவளிககிருர் எனபது அத்தகைய சான்றோருககுப புரியாமலா இருக்கும்? தட்டில் இருக்கும் குலோப்ஜாமூனை எடுத்துக் கையால் பிழிகிருர். 'ஐயோ! இது என்ன?' என்று கத்துகிருர் சேட்ஜி. மஹாத்மா அவரைப் பார்ததுப் புன்முறுவல் பூக்கிருர். குலோபஜாமூனைப் பிழிந்தால் ரத்தம் கொட்டுகிறது. எனன என்ன ரத்தமா? ரத்தம் எப்படி இங்கே வநதது? மஹாதமாஜி இஙகே விளக்கம தருகிருர். 'சேட்ஜி' ஏழை மககளைக் கசககி வட்டிககு மேல வட்டியாகச் சேர்த்தீரகளே அந்த மக்களது கொதிக்கும் நெஞ்சததிலிருநது கொட்டும குருதி இது-இநத உணவை நான் எப்படி ஏறபேன?—வநத வழியே மஹாத்மா போகிருர். கலங்கிய கணகளுடன் சேட்ஜி நிறகிருர்.

நேரிய முறையில் இலலாது தவருன வழிகளில — அநியாய வட்டி, லஞ்சம், கள்ள மார்க்கெட், கள்ள நோட்டு, கள்ளக்கடத்தல் மூலம்—பெறப்படும் பணத்தால் தயாரிககப்படும் உணவில் உள்ள தோஷமே ஸ்வத்வ தோஷம் என்பதை மேலே காணும் உதாரணம் விளக்குகிறது.

நமககாகவென்று உணவு தயாரித்தாலும், 'இது நான் பகவானுக்குப் படைககும் நிவேதனம' என்ற எண்ணம நமமிடம் ஊறிவிடுமாகில அத்தகைய உணவே நைவேத்தியமாக விடுகிறது.

எவ்விதம் உணவில் நான்கு வித தோஷம் இருக்கக் கூடாதோ, அது போல உணவில் நான்கு வித நல்ல தன்மைகள் இருததல் வேண்டும்

1. ஸௌரபயம ' தயாரிக்கப்பட்ட உணவிலிருநது நறுமணம் கமழவேணடும். அதனுல் உணவு உண்பவர் மனதில மகிழச்சி ஏற்படவேண்டும்.

2. ஸௌருபயம் : பார்ப்பதற்கு உணவு கவாச்சிகரமானதாக இருக்க வேணடும். தும்பைப பூபபோன்ற சாதம், சந்தனம் போல மோாக் குழமபு, மலலிகைப் பூப்போனற இடலி இததகைய உணவின் தோற்றமே பசியை அதிகரிக்கும்.

3. ஸௌரஸயம் ! உணவு ருசிகரமானதாக இருக்கவேண்டும. ஒரே விதமான பொருள்களைக் கொண்டு பலபேரைச் சமையல் பணணச் சொன்னுலும் உணவின ருசி வேறு படுவதைக் காணலாம். இதைச் சாதாரண உலக வழககில் 'கை மணம்' என்பா. உப்பு அதிகம, காரம் அதிகம், புளிபபு அதிகம் என்று இல்லாமல் பலரசங்களும குறித்த அளவில இருந்தால் உணவின ருசி கூடும்

4. ஸௌஹித்யம் ; உணவு சாத்விகமானதாகவும், உடலுக்கு நலம் பயப்

பதாகவும், உள்ளத்தில் நற்குணங்களை உண்டாக்குவதாகவும் இருத்தல் வேண்டும்.

உணவு தயாரிப்பதும் ஒரு கலை. அதை உண்பதும் மற்றொரு கலை. 'இறைவா இந்த உணவு உன்னருளால் நான் பெற்றது. இதை நீ ஏற்று என்னை அருள்வாயாக' என்று ஒவ்வொரு உணவு வேளையிலும் பகவானுக்கு உணவை அர்ப்பணித்து நாம் அதை அருந்துவதைப் பழக்கமாகக் கொள்ளலாம். அப்பொழுது உணவு நமது உடலில் சேர்ந்து நல்லாரோக்கியத்தையும் நல்வாழ்வையும் நாம் பெறுவோம்.

ஆற்றல் சொரூபமாக இருப்பதோடல்லாமல் மற்றொரு மகிமையும் பகவானிடத்துண்டு. அது எது?

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி
ஸன்னிவிஷ்டோ
மத்த: ஸ்ம்ருதிர் ஞானமபோஹனம்ச|
வேதைஸ்ச ஸர்வைரஹமேவ வேத்யோ
வேதாந்தக்ருத் வேதவிதேவ சாஹம்||
(15—15)

'எல்லாருடைய உள்ளத்திலும் நான் வீற்றிருக்கிறேன். நினைவும் ஞானமும் அவற்றின் அறிவும் என்னிடமிருந்து உண்டாகின்றன. வேதங்கள் எல்லாவற்றிலும் அறியப்படு பொருள் நானே. வேதாந்தத்தைச் செய்தவனும் வேதத்தை அறிந்தவனும் நானே'

இது வரை கடந்த பல சுலோகங்களில் பகவான் எந்தெந்தப் பொருள்களில் எந்தெந்த விதங்களில் தாம் திகழுகிறார் என்பதைத் தெரிவித்தார்.

'யச்சந்த்ரமஸி' என்பதன் மூலம் 'நீ நினைப்பதெல்லாம் நானே' என்றார்.

'யதாதித்யகதம் தேஜோ' என்பதன் மூலம் 'நீ எதையெல்லாம் காணகின்றாயோ அந்த வடிவம் அனைத்தும் நானே' என்றார்.

யச்சாக்னௌ' என்பதன் வாயிலாக நீ கேட்பது, பேசுவது எல்லாம் நானே என்றார்.

'காமாவிச்ய ச பூதானி' என்ற சுலோகத்தின் வாயிலாக 'நீ என் மடியில் எப்பொழுதும் இருக்கிறாய்' என்பதை உணர்த்தினார்.

'ஸோமோ பூத்வா ரஸாத்மக: என்ற சுலோகத்தில் 'நீ உண்ணும் உணவிலும் நான் உள்ளேன்' என்பதைத் தெளிவுபடுத்துகிறார்.

'அஹம் வைசவாநரோ பூத்வா' என்ற சுலோகத்தில 'நீ உண்ணும உணவை ஜீரணிப்பதும் நானே' என்றார்.

இவ்விதம் சொல்லிக் கொண்டே போனால் இந்தப் பட்டியல் நீண்டு கொண்டே போகும் அல்லவா? எனவே அனைத்தையும் தொகுத்துச் சுருக்கமாக இந்த சுலோகத்தில் மிக அழகாகக் கூறுகிறார்.

'அனைத்தினுள்ளும் இலங்குபவன் நானே' என்கிறார் பகவான். புல், புழு முதல் பிரமமா வரை அனைத்தினுள்ளும் ஆண்டவன் சொரூபம். உயர்திணை – அஃறிணை, உயர்குடிப் பிறந்தோன்–கீழ்க்குடிப்பிறந்தோன், பணக்காரன்–ஏழை, பண்டிதன் – பாமரன், ஆண்–பெண் அனைத்தினுள்ளும் இறைவன் இலங்குகிறான் என்ற அறிவு உடையவனே, அந்த அறிவினால் அனைத்திடமும் அன்பு செலுத்துபவனே உண்மையில் அறிவாளி ஆவான். இந்த உயர் ஞானம் நம்மிடம் நிலை பெற்று விட்டால 'நான் மேல் ஜாதி—நீ கீழ்சசாதி' 'நான முதலாளி – நீ தொழிலாளி' 'நான் மாமியார்- நீ மருமகள்' என்றெல்லாம உயர்வு தாழவுபாராட்டி நமக்கிடையில் நாம சண்டையிடுகின்றோமே அதெல்லாம இலலாதாகி விடும்.

இங்கே 'ஹ்ருதி' என்ற ஒரு வார்த்தை வருகிறது. கண் காது மூக்கு போன்ற புலன்கள செலலும வழியில் அலலாமல், அதாவது பொருள்களின் புறததோற்றங்களைக் கண்டு மயங்காமல அவற்றின உள்ளே உறையும் உண்மைத் தத்துவத்தை உணரும்படி நம்மை இந்த 'ஹ்ருதி' (ஹிருதயத்தில) என்ற வார்த்தையின் மூலம் பகவான் கேட்டுக்கொள்கிறார்.

இறைவனை எங்கே காணலாம்? எப்படிக் காணலாம்? இந்தக்கேள்வி அடிக்கடி எழுப்பப்படும் ஒரு கேள்வியாகும்? இங்கே அதற்கான விடை வருகிறது.

'இறைவன் அனைத்தினுடைய இதயத்தில் உறைகிறார்' 'இதய கமல வாஸன்' என்று சொல்லுகிறோம் இல்லையா? உள்ளுவார் உள்ளத்தே உறைபவன் இறைவன். 'உள்ளே உறைபவர்' என்பதைத்தான் 'கடவுள' என்ற வார்த்தை விளக்குகிறது.

உடலில் பரமாத்மா எங்கே உறைகிறார்? இது பற்றி முரண்பட்ட பல கருத்துக்கள் நம்மிடையே நிலவுகின்றன.

ஒலியின் அடிப்படையில் சாதனை செய்யும் சாதகர்கள், அதாவது சப்த பிரமமத்தை ஆராய்பவர்கள் 'வைகரீ வாணீ' கழுத்திலும், 'மத்யமா வாணீ' இதயத்திலும் 'பச்யந்தி வாணீ' தொப்புளிலும் 'பராவாணீ' மூலாதாரத்திலும் இருப்பதாகக் கருதுகிறார்கள். மாறாக குண்டலினி யோக சாதகர்கள் குண்டலினி சக்தியை மூலாதாரத்திலிருந்து கிளப்பி ஸ்வாதிஷ்டானம மணிபூரம போன்ற சக்கரங்களின் வாயலாக இறுதியில ஸஹஸ்ரார சக்ரத்தில் அதைக் கொணர்வதன் மூலம் பிரம்மஞானத்தைப் பெறுவதாகக் கருதுகிறார்கள். இப்பொழுது ஒரு கேள்வி எழுகிறது. பரமாத்மாவின் இருப்பிடம்-மூலாதாரமா அல்லது ஸஹஸ்ராரமா? எது?

(தொடரும்)

# ஈர ஆடை தீர்த்தம்

திருவரங்கம் பெரிய கோயில் ஸ்ரீ வைஷ்ணவர்களின் முக்கிய திருப்பதி ஆகும. அச்கோயில எமபெருமான் பெரிய பெருமாள். அவரை அரங்க நாதன, அழகிய மணவாளன என்றெல்லாம் அழைபபா. பெரிய அரசா களுக்குரிய மரியாதைகளுடன் இருபவர். அரச போகங்களை அனுபவிப்பவா. இப்பெரிய பெருமாளுக்கும் கஷடம் வநதது. முகமதியர்கள் படையெடுப்பினபொழுது நாடு கடததபபட்டாா டெல்லியில சுல்தானுவினுடைய அநதப்புரத்தில் சிறையிருநதாா

இநத எம்பெருமான திருமஞசனம கண்டருளவது பரம விலக்ஷணமுள்ளது. மகாகடபுரோக்ஷணததிற்கு முன்பு திருமஞ்சனக கட்டியம பட்டா சநததியாரால் ஸேவிககபபடும. கட்டியங்களில் பயின்று வரும் உருவகங்களும, உவமைகளும் சொல நய பொருள் நயங்கள் விஞசி மனததை ஆகர்ஷிக்கத் தக்கனவாய் இருககும். பிறகு சங்கதாரை, ஸஹஸரதாரை திருமஞ்சனத்திற்குப் பிறகு ஈர ஆடைத் தீர்த்தம அடியாாகளுக்கு வழங்கப்படுகிறது. எமபெருமான் திருமஞசனததின்பொழுது அணிந்திருந்த ஈர கைலி வஸதிரத்தை திருமஞ்சன தீர்த்தததில நனைத்து பிழிவர். இததீர்த்தத்தை அடியாாகள் ஆதரவோடு, பக்தியோடும் வாங்கிப் பருகுவர். 'வஸதிரத்திலிருந்து பிழியபபடும் நீர் ஏறறற்கு உரியதன்று, அதுபோலறு ஈர வஸ்திர ஜலமானது உத்தரகிரியைகளில் மடடுமே பயன படுத்தபபடும. இது ஒரு குறை' என்றும பிறர் நினைக்கக்கூடும்.

ஆயின் இஃது எககாரணம பறறி நடைமுறைககு வந்தது, இவ்வழக்கம் என்று வநதது எனபதை நம்மால் திட்டவடடமாகக கூற முடியவில்லை. ஆனால் இது தொன்னெறி எனபதறகு சானறுக வரலாற்று நிகழ்ச்சிஒன்றினைக்காண்போம்.டிலலியிலே ஒரு கலாப காலததில் நமபெருமாளைக் கவர்ந்து பிற எம்பெருமான்களோடுகூட இவரையும் எடுத்துச சென்றனர் நம பெருமாளை மீட்பதற்காகச சென்ற அறுபது திருநாமங்களில மீட்டு வநத பொழுது இரணடு திருநாமங்களே மிஞசினர். நம பெருமாளை மீட்டுவர $59\frac{1}{2}$ ஆண்டுகள ஆயின கால கதியில கோயில் கலவரம் அடஙகி நாடு நாடாயின வாரே கோயிலில் வேறொரு பெருமாளை பிரதிஷ்டிப்பித்து கோயில காரியம் நடத்தி வநதனா. வயது வந்தவாகளெல்லாம் மரித்துப் போக எஞசியிருந்தோா முன நடந்தது அறியகில்லாதிருந்தனா. இநநிலையில சந்திரகிரி அரசனின் துணைகொணடு இரண்டு குடவர்களுடன் எஞசியிருந்த இரணடு ஆதி ஸ்ரீரங்க வாசிகள திருவரங்கம வந்து சேர்ந்தனா. இவாகள் நம்பெருமாள மீணடும எழுநதருளினார் என்று சொல்ல ஸ்தல வாசிகள் நம்பிககை கொள்ளவில்லை. எதைக் கொண்டு நம்புவது என்று கேட்கலாயினர். அன்று தாயார் வடககு பிராகாரத்திலுள்ள வில்வ மரத்தடியிலிருநது ஸ்ரீ ரங்க நாச்சியாா வெளிப்பட்டார். இநத சகுனத்தினால் சறறுக குழப்பமடைந்த மக்கள் சோழ அரசனிடம் செயதி சொல்லி அனுப்பினர். சோழ வரசனும கோயிலுக்கு விடை கொண்டான். தாடியும மீசையுமாக கிழவர்களாக இருந்த அந்த ஆதி ஸ்ரீரங்க வாசிகளை அரசன் வரலாறு கேட்டறிநதான். இரணடு பெருமாளையும் பார்த்து யாா அசல், யாா பின வநதவர் எனபதை தெளிவாக பொருட்டு ஊரில் 80 பிராயததுக்கு மேறபடடவராய நம்பெருமாளை பூர்வ நிலையில் யாரேனும் ஸேவித்திருப்பரோ என்று ஆராய்ந்து ஒருவரும் கிடைக்காமல் முசித்திருக்கும் பொழுது அறிவு நலம் குறையாது நலலபடியாக 94 ஆணடு பிராயம் நிரம்பியவனாய் கோயில் வணணானொருவன் இருககக்கேட்டு மகிழ்ந்து அவனிடம் நடந்தவை அனைத்தையும் கூறினர் அவன் அரசனிடம் 'நான் பாாவை இழந்துளளேன். ஆகையினால பார்வையினால் அடையாளம் கண்டு கூறுவது என்னால இயலாது. இருப்பினும பல ஆண்டுகளாக நம் பெருமாளுடைய பரிமளத்தை, வெளுகக வரும் வஸ்திரஙகளில் நான நுகர முடியவில்லை. இரணடு எமபெருமான்களுக்கும்திருமஞசனம் செய்து தனித்தனியே ஈர ஆடைத் தீர்த்தம் ஸாதிக்கச் செய்தீரானால நான அடையாளம் கண்டு சொலகிறேன' என்று கூறினான். அப்படியே திருமஞசனம கணடு அருள பண்ணுவித்து, ஈர ஆடைத் தீாத்தமும் பிரசாதிகக, வநதிருக்கும் புதிய பெருமாளின் ஈர ஆடைத்தீர்த்ததழை பருகியவாறே மெய் விதிர் விதிாக்க, கண்ண நீர் வார, குரல் தழுதழுக்க, உரோம கூபஙகளாய் எழ எழுந்து 'கண்டேன் கண்டேன நமபெருமாள் நம்பெருமாள' என்று ஆடிப்பாடி குதிக்கலுறறான். இவவண்ணம் எம்பெருமானை அவன் அடையாளம் காட்ட பெரிய பிராட்டியாருடனும், அழகிய மணவாளனை சேர பாண்டியனின் மேல் எழுந்தருளப் பணணினார்கள். வணணானுககு ஈரங்கொல்லி என்று அருளபபாடு பிரசாதித்தனா. உடன வநத குடவர்களுக்குத் திருத தாழவரை தாஸர் என்று அருள பாடும கிடைததது. இவவரலாறு கோயிலொழுகு என்ற நூலில் உள்ளது. வண்ணானால் வஸதிர தீர்ததத்தைப் பருகி அடையாளம் காண்பிககப்பட்டதால் அதற்கு ஸமாரகமாக இநத வழககம (ஈர ஆடைத் தீர்த்தம வழங்கல்) வந்திருக்கலாமோ என்ற ஐயம எழலாம. ஆனால் குரு பரம்பரை நூலகளில நம் பெருமாளுடைய ஈர ஆடைத தீர்த்தம் ஈரங்கொலலி வரலாறுக்கு வெகு நாள் முன்பிருநது வழிவழி வந்த வழக்கம் என்று கோயில ஒழுகு முதலிய நூல்களிலிருநதும தெரிய வருகிறது. இருப்பினும் ஈரங்கொல்லி வரலாற்றால் இவ்வழக்கத்தின தொன்மையினை நாம் அறிகின்றோம். நம்பெருமாள மீணடும் நமக்கு கிடைக்க இநத ஈர ஆடைத்தீர்த்தம் பெரிதும் உதவிற்று எனபதையும் அறிகின்றோம்.

★

கொடடையூர்
தம்பு ப. கிருஷ்ணசாமி

# வைணவ வினா - விடை

## வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்

**புராணங்கள் பற்றிய விளக்கக் குறிப்பு என்ன?**

புராணங்கள் யாவும வேதநெறிககு ஆககம் தந்து விளங்குபவை. புராணங்கள் வேதம் வகுத்தளித்த அரிய தத்துவங்களை ஒரு நணபன தனது நணபனுககு எடுததுரைப்பதுபோல் ஆகயானம் (தானே கணட கதைகள) உபாகயானம (பிறர் சொலலக கேட்டது) காதா (முனனோர பறறிய இனியபாடல்) முறையில எடுத்துரைககும. புராணம என்ற சொல்லுககுப் பழைமையான என்பது நிகண்டுப் பொருள். இதறகு எதிர்ப்பதம் நவீநம எனபது. ஆனல் இஙகு வரும புராணம என்ற சொலலுக்குப் "புராணம் பஞ்ச லக்ஷணம" என்ற படிககு 1. உலகப் படைப்பு, 2. பிரளயம, 3 தேசத்தை ஆணடு வந்த பழஙகால மன்னாகளின் வமிச பரமபரை, 4 கிளையாகப் பிரிநத வமிசங்களின் சரிததிரம· 5. மன்வநதரஙகள என்பன விளககும பழைய நூல் எனப்பெயர். மிகப்பழமையான கருத்துக களாக எண்ணபபட்டாலும முக்காலத்துககும பொருந்தும் அவவபபொழுது புதிராக மிளிரும கருததுககள் கொண்ட நூலகள் எனவும பொருள. வேதத்தின் மூன்று பிரிவுகளில—கர்ம காணட (சடங்கு)ப்பகுதிகளைப பறறித தாமசாஸதிரஙகளும. தேவதா – பரமமம காண்டங்கள பற்றி புராண இதிஹாஸஙகளும விளக்கும தரும. ருகவேததததில படைபபைபபறறிப பேசும நூல என விளக்கம தரப் பட்டுளளது. இநதியப் பழைய வைதிக இலககியங்கள் இவை எனவும கூறுவாாகள். வாயுபுராணம - தொன்று தொட்டு வரும பழம் கதை எனறது. அதாவண வேத காலததிலேயே புராணங்களுககு விளமபரம உணடு. கி. பி 4-ல வாழநத கௌடிலயர் என்ற பொருளதாரமுனிவா தமது நூலில் அரச குமாராகள கடடாயம கறகவேண்டிய நூலகளே புராணஙகள என்றூர். வேதகாலததிலிருநதே வழக்கஎவில புராணஙகள இருநதன எனவும அறிகிறோம். ஆதிபுராணஙகள புததருக்கு முனபும ஏனைய புராணஙகள பினபும நூலகளாகத் தோனறின. கடவுள வழிபாட்டைப் பறறியே முககியமாகப் பேசும் மஹா புராணங்கள 18 ஆகும். சமயக குறிப்புகளும் விளககஙகளும் கொணட உப புராணஙகள பல ஆகும் முனபு உதயனன காலததில நீதியும் ஒழுககமும புகடடும நூலகளாகக கொண்டு கிராம மககள் இரவு நேரஙகளில படிபபார்கள். விரிவுரை செயவாாகள். கூத்தாகவும் நடிப்பார்கள். 18 மஹா புராணஙகளை வியாசபகவான அருள்கொண்டு யாத்தார். உப புராணஙகளைப பல முனிவர்கள எழுதினர் கள. சதபதபராமமணம என்ற நூல், நாளதோறும் புராணங்களைபபற்றிப் பேசிக்கொணடிரு என்றது. பருஹதாரணயக உபநிஷதம 'இதிஹாஸ: புராணம் விதயா உபநிஷத:' எனக கூறி புராணங்களை உப நிஷதங்களுடன ஒப்பிடடது குமரிலபட்டா புராணப பெருமையை நனகு ஸ்தாபித்தவா. 'அஷடாதச புராணுைம நாமதேயானிய· படேத்' என்ற செயயுளடி மூன்று வேளையும நாள்தோறும் புராணங்களின பெயாகளையே மநதிரம் போல பாராயணம் செய்வது அசுவமேதத்தின பலன தருமாம். பாத்மததில 'படனுத் சரவணுத யேஷாம் நருணுமபாப க்ஷயோ பவேத' எனக கூறபபடடுளளது இதனை ஒட்டித தமிழிலும் புராணஙகள தோன்றியுளளன. கோயிலகளைப் பறறிய தலபுராணஙகள் ஏராளம. திருவிளையாடறபுராணம, உமாபதி சிவம எழுதிய கோயிறபுராணம, அழகிய தேசிகா எழுதிய ஸேது புராணம, கசசியப்ப சிவாசசாரியார் அருளிய கநத புராணம், சேககிழார் எழுதிய பெரிய புராணம் போனறவை சானருகும. ஜைன மததததிலும பிரா-கிருத மொழியில் உள்ள ஆதிபுராணம என்ற நூலும உணடு. இநத ஆதிபுராணததைத் தமிழில ஸ்ரீ புராணம் என்ற பெயருடன எழுதியுளளாாகள. இஸலாம் மததததைப்பற்றிய நபிநாயகம அவர்களின சரிதம கூறும தமிழ் சீறுப்புராணமும், கிறிஸதுவததில வீரமாமுனிவா எழுதிய தேமபாவணி என்ற புராண நூலகளும உண்டு. உபபுராணங்களில்— வாஸிஷ்டம், காபிலம, கௌதமீயகம், ஸனத்குமாரீயம, பாஞ்சராத்ரம முதலியவைகளும் ஸம்ஹிதைகளும அடஙகும். புராணஙகளில் மஹா புராணங்கள 18 என்பன. 1. பததாயிரம செய்யுள்கொணட பராமமம். 2 55 ஆயிரம கொணட பாத்மம். 3. 23 ஆயிரம் கொணட விஷ்ணுபுராணம. 4. 24 ஆயிரம் கொணட சைவம். 5. 18 ஆயிரம் கொணட பாகவதம். 6. 25 ஆயிரம் கொணட நாரமீயம், 7 9 ஆயிரம கொண்ட மாாக்கண்டேயம். 8. 405 ஆயிரம கொணட ஆக்னேயம. 9. 514 ஆயிரம் கொணட பவிஷ்யம். 10. 18 ஆயிரம் கொண்ட ப்ரம்ம வைவாததம. 11. ஆயிரம் கொண்ட லிஙகம 12. 24 ஆயிரம கொண்ட வாராஹம். 13. 181

**(36-ம் பக்கம பார்க்க)**

# மகம் நக்ஷத்திரம்

திரு. ஏ. ராகவய்ய ஜோஸ்யர்

திருவளளுர்.

27 நக்ஷததிரங்களுள 10வதிடம பெறுவது மகம நக்ஷ த திர மா கு ம இதறகு நாம எழுததுககள மா மீ. மு. மே. ஆகும. இராக்ஷஸ கணம. பிதா தேவதைகள். யோனி எலி இநத நக்ஷததிரம பல புணய பலனுக குகநததாகும

இததகைய நக்ஷததிரததில் பிறநதவாகள அபூாவ பிறவிகள, ' மகத்தில பிறநதவர்கள் ஜகததினை ஆளவாாகள'' எனற பழமொழியும உணடு. சறறு கருநிறம ஆக இருப்பாாகள, செலவம உள்ளவாகள் மதய பார்வை உளளவர்கள உகர சுபாவம. சில நேரததில கடுமையாக பேசுவார்கள, வித்வாமசம் உளளவாகள பெரிய நகரஙகள பட்டணஙகளில வசிபபவாகள. பலா நயமாக பேசுபவாகள. செலவம் சோபபவர்கள. இவர்களுககுத தெரியாதது ஒனறும் இராது. சகல கலா வலலவாகள. தநதிரத்தில் சதுனியை போனறவர்கள். தனனலததிறகு ஏதும இடையூறுகள செயது கொளள மாட்டாாகள இவாகள பகையாளிடமதான தநதிரததைக கையாளுவாாகள. சில சமயஙகளில திடீா கோபம வநது மறறவாகளால வெறுககபபடும நிலைககு ஆளாவாாகள உயாநத குணததையே கையாணடுவரும இவாகள திடீரென அறப புததியுளளவராக மாறி விடுவாாகள.

ஸ்ரீகளின வாசததால இவாகள வாழகை கெட்டு விடும இவாகள வந்த பெணணிடம பேசாமல் போயக கொண்டு இருநதாலும அவாகளை அாசசுனனைக கணட பெண போல மயஙகி இவாகளைத தொடாநதுவநது இனனலை உணடாககுவார்கள வீராப்புடன பேசினாலும கிருஷ்ணன துணையிலலாத அாசசுனன நிலைதான இவாகள நிலை. இவாகள் 30 நாழிகைககுபின ஜனனமானால வாழககையில கடுமையான துயரததை அனுபவிபபாாகள தரிததிர தேவதையின கையில சிக்கிக குசேலரைக் காட்டிலும துனபம அடைவாாகள.

இவாகளுககுப பூபபோட்ட ஆடைகளும கோமேதக ஆபரணங்களும உகந்தது. இவாகள வாழககையை சீா குலைபபதில சொந்தககாராகளும பெணகளும தலைமை தாங்குவார்கள. இவாகளுககு கணகள் அடிக்கடி சிவநது போய அதனால வேதனையும மனககலககததையும உணடாககும. வாத சமபநத பிணிகளும சிலசமயத்தில மூசசுவிட முடியாத நிலைகளும உண்டாகும. இவாகள் மருததுவாகளுககு ஓயவு தர மாட்டாாகள் எளளு சமபந்த பணடஙகள மீது அதிக ஆசையுள்ளவர்கள. சிறுத்தொணட நாயனாா போல பசி என வநதவாகளுககு உதவி செய்வாாகள. முன பின தெரியாதவாகளாக இருநது இவாகள உதவியை நாடினால கறபக மரம நிழல தருவது போல அவாகளுககு உதவி செயது அவாகளாலே இனனலுறுவாாகள தனனுடைய சொததுககளை கூட அவாகளுககு எழுதி வைதது திணடாடும நிலைக்கு ஆளாவாாகள இது போனற நிலை இவாகளுககு ஸ்ரீசாபததால உணடாகும

இவாகளுககு முகததில திலகம போனற மசசம இருககலாம வட மேறகு திசைகளில சென்றால நனமை அடைவா மறற திசைகளில சென்றால திரவிய நஷ்டஙகளும, அலைசசலுமதான உணடாகும ஆனால எதிலும இவாகளுககு எதிரிகள உணடு ஆனால அநத பகைவாகள இவாகளை வநது அணுகினால பகைமையை மறநது விதுரா கணணபிரானுககு விருந்து உபசாரங்கள செய்தது போலதான. கலை மீது அதிக ஆாவம. பல பட்டஙகள் பரிசுகள் பெறுவாாகள. ஓவியங்கள் தீட்டுவதும புகைபபடம எடுப்பதும் இவர்களுடைய பொழுது போக்கு காடு மேடுகளிலும இயறகை காட்சியுளள இடங்களுககுச செல்வதில ஆவலுண்டு பரதநாட்டியம, சஙகீதம முதலியவறறைக கறறுக கொளள ஆவலுளளவர்கள். பாடுபட்டு உயாவான கலைகளை நிலைநாட்ட இவர்கள முன் வருவார்கள. அதறகான பண உதவிகளும செய்வாாகள சிலர் யோகாசனஙகள் பயில்வதும் யோகாசன பளளிகளை நடததுவதிலும் ஆவல் உளளவாகள். உலக உபகாரமான செயலகள புரிபவாகளாகவும இருபபாாகள யோகிகளை அணுகி ஞானமாாக சமபநதமான உபதேசஙகள பெறறு, ஆசிரமஙகள அமைத்து ஞானததை போதிதது உலக உபகாரிகளாக விளஙகுவாாகள. தாம ஸதாபனஙகள, கலயாண மணடபஙகள கட்டிவைததலும கனனிகாதன திருமணஙகளை பிறா தகுதியறிநது இலவசமாக நடததி வைததலும ஏழைகளுககு அனனமளிதது அவாகளுககு நனமை செயயும காரியஙகளில ஈடுபடுவா சிலா பெண தேவதையை உபாசிதது மநதிரசகதி பெறறு அதனால தனலாபம பெறுவர். ஜனங்கள இவாகளைத தொடாநது செல்லுமளவிறகு ஜனவசியஙகளைஏறபடுததி இரவு பகல ஏவல தேவதை போல் ஓயாமல திரிவா துப்பறியும் தொழில புரிபவாகளாகவும் இருககலாம மேலதிகாரிகளிடம பாராட்டும பரிசும் பெறுவாாகள

முதல பாதம '- அழகுடையவாகள், சிவநத கணகள, செமபட்டை முடி, அடிமை தொழில் புரிபவராகவும்

இருப்பர். எவ்வளவு உயர்ந்த நிலையில இருந்தாலும கடைசியில் அடிமைத் தொழிலே உண்டாகும. எதையும் எளிதில் அறிந்து கொள்ளும திறனுள்ளவர்கள்.

இரண்டாம பாதம - அழகுடையவாகள், இவா இறநத காலததையே எண்ணி வருநதுவாாகள். வழககறிஞா, நீதிபதிகளாக இருக்கலாம. சிலர் யக்ஷிணிகளின் உதவியால கடந்த காலததை கணித்து சொல்பவராக இருப்பர். தனிமையை நாடுவா. தியாக உள்ளம் படைததவர்கள பிறருககாக தம் வாழ்க்கையை தியாகம செய்யும் திறன படைத்தவாகள.

மூனறும் பாதம :- ஞான மார்ககத்தைக கடைபிடிப்பவாகள. யோகிகளின் சீடாகளாக இருந்து ஞான மார்ககத்தை உபதேசிப்பவாகள. நிபுணாகள். விசேஷ அறிவுடையவர்கள்

நான்காம பாதம் .- குட்டையான வர்கள். பெண் பிரியர்கள். தெரிந்தும் தெரியாதது போல் நடப்பவாகள் வெளிபபடாத உளவியாதிகள் இவாகளைப பிடிககும். புததிசாலிகள். இவர்களுககு வாய்ககும மனைவி பாக்யலக்ஷ்மி என்றேகூறலாம. சாநத குணமுள்ளவள். செல்வ குடும்பததைச் சாாந்தவள. எந்நேரமும கணவனை விட்டுப் பிரியாமலிருக்க விரும்புபவா. இவர்கள முகததைப் பார்தது எஙகுச் சென்றாலும் வெற்றியையே அடைவாாகள். இவர்கள் எஙகுச் செனறாலும் துணையினறிச் செல்லமாட்டார்கள உரககப் பேசுவதற்கு அஞ்சுவாாகள. ஆடை, ஆபரணம் மீது அதிகஆசையிராது. ''கணவனே கணகணட தெயவம'' 'பதி சேவை செயவதே பரம பாககியம' எனபதே இவாகள கருதது. மனைவியினாலேயே உயாநத பதவிகள அடைவர்.

மக நக்ஷத்திரத்தில் ருதுவான பெணகள் ஒரு வருட காலம் வரை தாய் வீட்டிறகு இன்னலகளையும, குடுமபததில அமைதியினமையும, மனக் குழப்பஙகளையும ஏற்படுததுவா. மாத பிரவேசம ஆக இருநது பகல 12 மணிக்கு பின் ருதுவாகும் காலம இருந்தால மணவாழ்கையைககு தோஷம் எற்படுவதும மணத்தடைகளும கார்த்தலக்ஷணமுளள புருஷன் வாயப்பதும் பல வருஷங்களாக கை கூடாமல கட்டாயத் திருமணமும் உணடாகும ஆனால் தோஷங்களுக்கு அப்போதே பரிகாரம செய்து விட்டால இடையூறுகள் நீஙகி மண வாழ்க்கை செமமையுடன ஏறபடும.

பொதுவாக ஆபரணமான மேகலாபரணத்திற்கு இம்மக நக்ஷத்திரம மூலாதாரமாகும. இம்மக நக்ஷத்திரத்தில் சனி பகவான சஞ்சரிககும போது பலமான துயரங்களும கண பார்வை தோஷங்களும உணடாகும். இது ஆண, பெண் இருபாலாருக்கும பொருநதும். இதறகுச்சனி பிரதோஷ விரதம, ஹோமம அர்ச்சனை தானஙகள செயவதால் தடைகள நீஙகி நனமைகளுணடாகும.

இந நக்ஷத்திரததில் பிறந்தவர்களுக்கு காாத்திகை மாதம் நல்லதலல. பிரதி மாதம ஞாயிறு, செவ்வாய், வியாழன கிழமைகளும் 7,16, 24 தேதிகளும் நலம் தருவன. இவாகள ஜனிதத கேது தசை 7 வருஷஙகள. முதல 6 மாதம கட்டிகளால பிணி, 18வது மாதத்தில தீயினால் துன்பம, 5 அலலது 7-ம வருஷத்தால கபஜுரம 10 வயதிலும் 13 வயதிலும வாத பிணி, மன மாறறம, 60 வது வயதில ஆயுத சம்பநத இடையூறு, 70வது வயதில் அபமிருத்யு தோஷத்தால் உடல் உபாதைகள ஏறபடும. இவற்றிற்குத் தக்க பரிகாரம செய்துவர 84 வருஷம் பரம ஆயுள் பெறுவர்.

★

பாரதக் கதை ஒரு பழம்பெரும கதை. இக்கதையைத் தமிழில் பல புலவர்கள பாடியுள்ளனர் தமககுத தோனறியவாறு சில புலவாகள் மாற றமும், வேணடியாங்கு செய்துகொண டனர். பாரதக்கதை ஒரு நெடுங கதையாய் இருப்பினும், நீதிகளின பொருட்டு இக்கதைகளின நடுவே சொலலப்படட சிறுகதைகள கூட பெரிய காப்பியங்களின அளவிறகு பின்னோர்களால இயற்றப்பட்டு விட் டன

தான் வியாசர் கதையைத் தமிழ்ப் படுத்தினேன் எனறு கூறினாலும் பெருநதேவனாரின் அடியொற்றியே தம கதையை நடததிச செலகின்றார்.

கிடைததிருககின்ற எலலா பாரத மும பஞ்ச பாண்டவாகட்கும கௌர வாகடகும இருநத பகையைப பல படியாயப புனைநது காட்டுகினறன. ஆயின அவர்களுககுள பகை உண டானதற்கான வலுவான காரணம ஒனறையுங காட்டவிலலை

இவ்வாறு கூறிய பின்னர் துரி யோதனனியா வீமனை கொடிகள் கட்டித் துனபுறுததல, பாமபுகளால் கடிகக விடுதல, கழுவில விழுதத முயறசிததல, விஷம கொடுதது கஙகையில் எறிதல் போனற செயதி களைக கூறுகின்றா.

இவற்றிறகுப் பினனா துரோணர் வரலாறும வருகையும விலலியில காணபபடுகிறது பிறகு பாணடவரும் கௌரவரும விலவித்தைப பயில்கின றனா என்று கூறுகிறது.

# பாரதமும் பலாவும்

நளனின சரிதத்தை நளவெண்பா வும் நைடதமும் கூறுகின்றன. குசேலர் வரலாற்றை குசேலாபாகயானம் விரிவாய்க் கூறுகிறது. அரிச சநதிரன் வரலாறு அரிசசநதிரபுராண மாயிற்று பாண்டியன் மகள் சிதராங கதை, தன் கணவனான அர்ச்சுன னுக்கு மாரியை தூது விட்டதாக கற்பனை செயயப்பட்ட நூலே மாரி வாயிலாகும்.

இவை மட்டுமினறி பல நாட்டு புறப்பாடலகளும் தோன்றியுள்ளன அலலி அரசாணிமாலை, பவளககொடி மாலை, புலந்திரன்களவுமாலை, பொன னுருவி மசககை, ஏணியேறறம, புலந திரன தூது போனற நாடடுப்புற இலககியஙகளும தோனறின.

இவ்வாறு இப்பாரதநூல பல கிளைக்கதைகள் தோனறுவதறகு ஆதாரமாய இருநதன. கதைப போககிலும காலநதோறும சிறசில மாற்றஙகளும தோனறத தொடங் கின. வியாசர் சொனன கதைக கும பெருந்தேவனார் கதைககும வேறுபாடு உண்டு. வில்லிபுததூராா

பீமனுக்கும், துரியோதனனுககும் பகை உண்டு என்றும இளமை முதற் கொணடே அவர்கள் பகையுடன் வளர்ந்தனர் என்றும் விலலிபுத் தூரார் கூறுகினறார். பெருந்தேவ னா பாரததததில் இப்பகுதி கிடைகக விலலை.

இவர்கள இருவரும பகையுடன் இருந்தனா எனபதை விலலி அவா கள், இருவரும் கருடனும் நாகமும் போல வளர்ந்தனர் எனறு குறுபபிடு வா. காரணம ஒன்றும் குறிததிலா.

திரு. வ. கோவிந்தன், எம் ஏ.
புதுபபேட்டை

'' எயில நலம்புனை கோபுரம மாபுரதது
எழுதுமா ளிகை தோறும
வெயில நிலாஉமிழ் கனகம் நீள வீதியில
விலாசம உற்றிடும நாளில்
பயினன மேல்வரு கல எனச் செறிந்த மெய்ப
பவனன் மைந்தனும ஒத்தான
வயின தேயனை காத்திர வேயரை
மன்னன மைந்தரும ஒததார் ''
(விலலி — ஆதிபருவம 274)

ஆயின் பனழய கதை ஒன்று துரோ ணரிடம் அவர்கள் வில் பயிற்சி போனறவற்றைப் பெறும போது தான் விரோதம் உண்டாயிற்று என றும, இவ்விரோதமும பூபாரம தீக் கும பொருட்டு தேவேந்திரனால் உணடாக்கப்பட்டதென்றும் கூறு கின்றது.

வீமனுக்கும் துரியோதனனுக்கும் திட்டமிடடே பகை உண்டாககப்பட் டது என்றும, அதறகு ஒரு பலாப் பழம காரணமாய் இருந்ததெனறும அககதை கூறுகினறது. அக்கதை யினை இவண நோக்குவோம.

ஒருநாள் தேவேநதிரன் சபையில் நாரதன முனிவன தோன்றினான். அவனை வணஙகிய தேவேந்திரனை நாரதன ஆசி கூறி 'அசுர அமசமாக துரியோதனனியர்களும், தேவாம்ச மாக பாண்டவர்களும் தோன்றியுள ளனர். தெய்வாமசமாக திருமாலும் பூமியில அவதரிததுளளார். ஆதலால் இந்த நல்ல தருணத்தில் பாண்டவருக் கும் கௌரவர்க்கும பகை உண்டாக்கி விட்டால் நாளடைவில் பகை முற்றி

## தி. தி. தேவஸ்தானத்தாரின

# ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில், திருச்சானூர்

## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலே

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸரநாம அர்ச்சனைரூ.6-50 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | | | | —நித்ய அர்ச்சனை (வருடததிறகு ரூ 150/- செலுததும கிருஹஸ்தாகள பஙகேறகலாம்) |
| 6-15 | ,, | 6-45 | ,, | —சுததி—முதலமணி |
| 6-45 | ,, | 1-00 | மதியம் | —ஸாவதரிசனம |
| 1-00 | ,, | 1-30 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 1-30 | ,, | 7-00 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | ,, | —சுத்தி, இரவு மணி |
| 7-30 | ,, | 8-30 | ,, | —ஸர்வதரிசனம் |
| 8-30 | ,, | 9-00 | ,, | —ஏகாநதசேவை |

காலே — வெள்ளிககிழமைகளில

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | ,, | 4-30 | ,, | —ஸர்வ தரிசனம |
| 4-30 | ,, | 5-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்சசனை ரூ. 6-50 (நானகு நபர்களை அனுமதிக்கப்படுவர்) |
| 5-00 | ,, | 5-15 | ,, | —நித்ய அர்ச்சனை |
| 5-15 | ,, | 5-45 | ,, | —சுததி, முதல மணி |
| 5-45 | ,, | 7-00 | ,, | —ஸாவதரிசனம |
| 7-00 | ,, | 7-30 | ,, | —சாலிமபு |
| 7-30 | ,, | 9-00 | ,, | —தாயாருககு அபிஷேகம் (ரூ. 100/- செலுததி இரு நபர்கள் பங்கேற்கலாம) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அலங்காரம, 2வது மணி |
| 10-00 | ,, | 8-00 | இரவு | —ஸாவ தரிசனம் |
| 7-00 | ,, | 8-00 | ,, | —கணணுடி மண்டபததில ஊஞசல சேவை. (ரூ. 150/-செலுததி பஙகேற்கும இரு நபாகளுக்கு சுமாா 5 கிராம எடையுளள வெளளிப் பதககம வழஙகப்படும) |
| 8-00 | ,, | 8-30 | ,, | —இரவு மணி |
| 8-30 | ,, | 9-00 | ,, | —ஏகாநதசேவை |

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

I தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம ரூ. 2/- (நபா ஒருவர்க்கு)

| II ஆர்ஜிதம் | | | III சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொஙகல | ½ அளவு | ரூ. 55/- | (அ) நித்ய அர்ச்சனை (ஆணடொனறுக்கு) | ரூ. 150/- |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 50/- | (ஆ) ஸகஸ்ரநாமஅர்சசனை | ரூ. 6-50 |
| (இ) ததயோதனம | ,, | ரூ. 40/- | (இ) அாசசனை | ரூ. 1-00 |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 85/- | (ஈ) ஹாரததி | ரூ. 0-50 |
| (உ) சாககரைப் பொஙகல | ,, | ரூ. 65/- | (உ) பூராபிஷேகம (வெளளிக் கிழமையில மட்டும்) | ரூ 100-00 |
| (ஊ) தோசைப்படி | ,, | ரூ. 35/- | (ஊ) ஊஞசல சேவை (வெளளிககிழமை மாலையில் மட்டும்) | ரூ.150-00 |
| (எ) ஸாகரபாத | ,, | ரூ. 90/- | (எ) திருச்சி உறசவம | ரூ. 63-00 |
| (ஏ) ஸீரா | ,, | ரூ.155/- | (ஏ) யானை வாகனம | ரூ. 32-00 |

* திருப்பதியிலிருநது 3 கி மீ. தொலைவிலுளள திருசசானூருக்குப் போயவர பேருநது வசதியுணடு.

வர் கணகளுக்கும் இலக்காய் விளஙகி வருகிறது.

அபரதக்ஷிணப புறபபாடும மணவாளப பிளளை பகுமானமும'

இனி, திருவேஙகடமுடையானுக்குப் புரட்டாசி மாதப பிரமமோதஸவததின ஏழாம நாள மாலையில தோட்டவுலாப புறப்பாட்டின்போது பெருமாள் அப்ரதக்ஷிணமாக எழுந்தருளுவதும, எட்டாம நாள் காலையில திருததேரப புறப்பாட்டின போது அனநதாழ்வான பெருமாளுககு மணவாளப்பிள்ளை ஸமபாவனை செய்வதும பற்றிய சரிதம சொலலபபடும்.

ஸ்ரீராமானுஜ முனிவரின கட்டளைப படி அனநதாழவான் திருவேஙகடமலையில் பெரிய தோட்டமும் அதறகு ஆதாரமான ஏரியும நிருமிதது அளவறற மலா மாலைகளைத் தொடுதது ஸமர்ப்பிக்கும கைங்கரியததினால் திருவேங்கடநாதனை மகிழ்வித்துக கொணடிருககுமபோது, பரமதயாளு வாயப பகதாகளிடம கடல போனறு அளவறற பேரனபு கொண்ட அநத ஸ்ரீநிவாஸப் பெருமான், தன பகதரான அனநதாழவான எலலையிலலாமல எபபோதுமசெயயும புஷப கைஙகரியம தன்னால மட்டறற மகிழசசியுடன ஏறறுக கொளளப்படுவதையும அககைஙகரியததில ஊறறததுடன் கூடிய அவருடைய மனததூயமையையும அனைவாககும வெளிபபடுதத விருமபி, ஒரு காலதான ஒரு ராஜகுமார வேஷநதரிதது ராஜகுமாரி வேஷநதாஙகிய தன மனைவி அலாமேல மங்கையுடன இரவு நேரஙகளில அனநதாழவானுடைய பூநதோட்டததுள புகுநது இஷடபபடி உலாவி அங்குளள மலா தளிர் பழம முதலானவறறைப பறிததுத தோட்டததைச சீர்குலைததான.

அதன் பின்பு அனந்தாழவான் இரவுகளில பூநதோட்டம நன்னிலை குலைககபபடுவதைக கணடு, பகவானு

டைய தோட்டத்தை இப்படிக் கெடுக்கும் திருடன் யாராக இருக்கலாமென்றெண்ணி மனங்கலங்கித் திருடனைப் பிடிப்பதில் தாம் எவ்வளவோ கவனத்துடன் இருந்தும் திருடன் அகப்படாமல் இங்ஙனமே எட்டு நாள்கள் சென்ற பின்பு ஒன்பதாம் நாள் இரவில் அரச தம்பதிகளின் வேடந்தரித்த பெருமாளும் பிராட்டியுமாகத் தம் கருணையினாலேயே அனந்தாழ்வான் கைகளுக்கு அகப்பட, அவர் அவர்களை ஓர் கொடியினால் ஓர் மரத்தில் கட்ட விரும்பி இழுக்கும்போது பெருமாள் எப்படியோ அவருடைய கைகளை விடுவித்துக் கொண்டு மிகவும் அஞ்சியோடி அப்ரதக்ஷிணமாகவே கடுவேகத்துடன் வீதியைச் சுற்றிச் சென்று தன் கோவிலுக்கு ஓட்டம் பிடிக்க, ஓட முடியாத அரசிளங்குமரி வேஷதாரிணியான அலர்மேல் மங்கையை ஒரு செண்பக மரத்தில் கட்டி அச்சமுறுத்தி (நீ யார், உன் கணவன் எங்கே சென்றான், எதற்காக நீங்கள் இங்கு வந்தீர்கள் என்றிவ்வாறு) அவர்களது வரலாறு முழுவதையும் வினவிக் கொண்டே போது விடியும் வரையில் கவனத்துடன் அருகிலேயே இருந்தார்.

அப்பிராட்டி 'வாரீர் அனந்தாழ்வானே, (தவறு செய்த) அந்த என் கணவனைப் பிடித்துக் கொள்ளும், தவறு செய்யாத பெண் பிள்ளையாகிய என்னை விட்டுவிடும், நான் உமக்குப் பெண்ணாக இருப்பேன்' என்று அவரிடம் மன்றாடிக் கொண்டிருந்தாள்.

பிறகு காலையில் பரிஜனங்கள் அனைவரும் கோவிலுக்கு வந்து பெருமாள் திருமார்பில் கண்டியிலிருந்த அலர்மேல் மங்கைத் தாயார் தென்படாமையால் அர்ச்சகர்களை வற்புறுத்திக் கொண்டிருக்கையில், ஒருவர்மேல் பகவான் ஆவேசித்து நடந்ததை அப்படியே அறிவிக்க, அப்பெருமானது ஆணையின்படிப் பரிஜனங்கள் பிராட்டியையும் அனந்தாழ்வானையும் அழைத்து வருவதற்காகத் தோட்டத்திற்கு வந்து அனந்தாழ்வானிடம் செய்தியை அறிவிக்க, அவர் பிராட்டியைச் செண்பக மரத்தினின்றும் விடுவித்துத் தாம் செய்த தவறுக்குப் பொறை வேண்டிக் காலையனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு, 'நான் உமக்குப் பெண்ணாக இருப்பேன்' என்று தான் சொல்லிய சொல்லை மெய்யாக்க விரும்பி அவருக்குப் பெண்ணாய் மணம் புரிவிக்கத் தக்க ஒரு கன்னிகையின் நிலைமை யெய்திய அலர்மேல் மங்கைத் தாயாரை பூங்குடலையோடுகூட அக்குளில் எடுத்துக் கொண்டு பெருமானிடம் வந்து அவனிடம் அபராதக்ஷாமணம் பண்ணிப் பிராட்டியை ஸமர்ப்பித்தார்.

அப்பெருமானும் தனது பொன் மாலையொன்றை அனந்தாழ்வானுடைய கழுத்தில் அன்போடு அணிவித்துப் பிராட்டியைப் பெற்றுக் கொண்டான். பின்பு அவள் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கையில் பெருமான் திருமார்பிலுள்ள கண்டியில் சேர்ந்து முன்புபோல அர்ச்சை வடிவந்தரித்துத் தங்கியிருக்கலானாள்.

இவ்வாறு நடந்த கதையைக் கேட்ட ஸ்ரீ ராமாநுஜ முனிவர் ஸ்ரீநிவாஸனுக்கு அனந்தாழ்வானிடம் அபிமானம் அதிசயித்துள்ளமையை அறிந்து, முன்பு பெருமாள் அனந்தாழ்வானுடைய சரித்தத்தை நினைவூட்டத் தம் மோவாயில் கருப்பூரப் பொடியை அணிவிக்கும்படியும் கோபுரவாசலுக்குள் கடப்பாறையைப் பொருத்தும்படியும் நியமித்ததுபோல, தாமும் இக்கதையை அனைவருக்கும் நினைவுபடுத்துவதற்காக, 'இது முதல் ஆண்டு தோறும் நடக்கும் புரட்டாசி மாதப் பிரம்மோத்ஸவத்தின் ஏழாந்திருநாள் மாலையில் திருத்தோட்டவுலாவின் போது முன்பு பகவான் அஞ்சியோடி அப்ரதக்ஷிணமாகச் சென்ற சரித்தத்தை நினைவூட்டும் வகையில் பெருமாளுக்கு அப்ரதக்ஷிணமாகவே புறப்பாடு நடத்தி வைக்க வேண்டுமென்றும், முன்பு போலவே பெருமாள் தோட்டத்திற்கு எழுந்தருளும்போது பெருமாள் மாலையை அனந்தாழ்வானுக்குச் சாத்த வேண்டுமென்றும், எட்டாம் நாள் திருத்தேர்ப் புறப்பாட்டின் போது அனந்தாழ்வான் பெருமாளை மணவாளப் பிள்ளையாக நினைத்துப் புது வஸ்த்ரம் ஸமர்ப்பிக்க வேண்டுமென்றும் நியமித்தருளினார். அது முதல் அப்படியே நடத்தப்படுகிறது. (குறிப்பு-இத்தோட்ட வுத்ஸவம் இப்போது புரட்டாசித் திருநாளில் ஏழாம் நாள் மாலையில் நடைபெறாமல் பத்தாம் நாள் மாலையில் நடைபெறுகிறது. பாகஸவாரி என்று இதற்குப் பெயர். புஷ்பமாலை பகுமானம் அனந்தாழ்வான் காலம் வரை அவருக்கே நடந்து வந்து, அவர் பரம பதித்த பின்பு அவருடைய தோட்டத்தில் முளைத்து 'எம்பெருமான் பொன் மலைமேல் ஏதேனு மாவேனே' என்று ஸ்ரீ குலசேகரப் பெருமாள் அருளிச் செய்தபடியே அனந்தாழ்வானுடைய அவதாரமாகப் பெரியோர்களால் கருதப்பட்ட பெரியதோர் மகிழ மரத்துக்கு நடை பெறுகிறது.)

**மார்கழி மாதம் முழுதும் இரவில் கண்ணனுக்கே ஏகாந்த ஸேவை:**

இனி மார்கழி மாதத்தில் (இரவில்) கண்ணபிரானுக்குத் திருப்பள்ளிக் கட்டிலில் திருக்கண் வளர்ந்தருளும் போகத்தை நடத்தி வைத்த சரிதம் கூறப்படும். திருவேங்கடமுடையான் கோவிலில் நாள்தோறும் திருமஞ்சனப் பெருமாளான அழகப் பிரானென்னும் போக ஸ்ரீநிவாஸனுக்கே சயன மூர்த்தியாகத் திருப்பள்ளிக் கட்டிலில் சயனித்தருளும் அனுபவமானது ஸ்ரீவைகாநஸாகமத்தில் கூறியபடி நடத்தப்பட்டு வரு

மனவில், பகவத் ராமானுஜ முனிவா ஸ்ரீ வைகாநஸாகமத்தைச் சேர்ந்த தொரு ஸம்ஹிதையில் மார்கழி மாதத்தில் கண்ணபிரானுக்குக் கட்டிலில் சயனோத்ஸவம நடத்த வேண்டு மென்றுள்ள விதியையும், ஒரு கோவிலில் ஐந்து மூர்த்திகளில்லாமல மூன்றே மூாததிகள இருநதால ஆண்டு முழுவதும் கண்ணனையே சயன மூர்த்தியாக எழுந்தருளப பண்ண வேண்டுமென்றுள்ள விதியையும கண்டருளி, ஆண்டாள் மாாகழி மாதத தில் கண்ணபிரானோடு கூட வே தனக்குத திருப்பள்ளிக கட்டிலில் லீலாரஸானுபவம வேண்டுமென்று விரும்பி ஒவவொரு நாளும் ஒவவொரு பாசுரமாக ஓதும்படி முப்பது பாசுரங்கள் அமைந்ததும் கண்ணனைத் திருப்பள்ளி யுணர்த்துமதுமான திருப்பாவை யென்னும திவ்யப் பிரபந்ததகை அருளிச செய்ததையும, அாசசாமூர்த்திகளில் மற்றவரை விடத் திருவேஙகடமுடையானிடத தில் ஆண்டாளுககு அதிகமான ஆதர முண்டென்பது அவளது இரண்டாவது பிரபந்தமாகிய நாச்சியாா திருமொழியின் முதற்பாட்டிலேயே 'அனங்கதேவா - வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே' என்று வெளிப்படடு நிறபதையும் ஆராய்ந தருளி, அவளுடைய விருப்பததுககு இணஙகுமபடியும ஸ்ரீ வைகாநஸாக மத்தில் விதித்துள்ள பலத்தைக் கொண்டும், திருவேங்கடமுடையானே கண்ணனுயிருநது அவவாண்டாளுக்குச் சயன போகத்தைத் தருகிறானென்று பாவனை செயது மார்கழி மாதம் முழுதும கண்ணபிரானுக்கே சயனோதஸவம நடத்தி வைக்க வேணுமெனறும மறற மாதஙகளில் போக ஸ்ரீநிவாஸ மூாத்தியான அழகப் பிரானுக்கு நடத்த வேணுமென்றும் வரையறை செய்தருளினா. அக்கால முதல் மார்கழி மாதததில கணணபிரானுக்கே சயனோத்ஸவம் (ஏகாந்த ஸேவை) நடத்தப்பட்டு வருகிறது.

(தொடரும்)

---

(14-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆயிரம கொண்ட ஸ்காந்தம. 14. 10 ஆயிரம கொண்ட வாமனம். 15. 17 ஆயிரம் கொணட கௌர்மம. 16. 14 ஆயிரம் கொணட மாத்ஸ்யம. 17. 19 ஆயிரம் கொண்ட காருடம. 18. 12 ஆயிரம் கொண்ட பரம்மாண்டம் எனபனவாகும. இவை களின் ஏறக்குறைய எண்ணிக்கை 4 லக்ஷம் செய்யுள்களாகும். இவைகளை—சத்வம—ரஜஸ்—தமஸ என மூன்றாகவும் பிரித்துள்ளாாகள். இந்த 18 புராணங்களின் பெயர் மறக்காதிருக்க ஒரு நுணுக்கமான செய்யுள் உண்டு.

"மத்வயம் பத்வயம் சைவ பரத்ரயம வசதுஷ்டயம் |
அ நாபாலிங்க கூஸகானி புராணுனிப ப்ரசக்ஷ தே ॥ "

என:- ம என்ற எழுததில் தொடங்கும் மத்ஸ்ய புராணம், மார்க்கண்டேய புராணம் இரணடு. ப என்ற எழுத்தில்தொடங்கும இருபுராணங்கள்-பவிஷ்யம்-பாகவதமாகும். ப்ர என்ற எழுத்தில்தொடங்கும மூன்று புராணங்கள். ப்ராம்மம், ப்ரம்மாண்டம ப்ரம்ம வைவாத்தமாகும. வ என்ற எழுத்தில் தொடங்கும நான்கு புராணங்கள வாமனம், வாராஹம் விஷ்ணு, வாயு என்பன. பிறகு அ என்ற எழுததில தொடங்கும் அகனி, நா என்ற எழுத`'ல் தொடங்கும் நாரத, ப எனற எழுததில் தொடங்கும் பத்மம், லிங் என்ற எழுத்தில தொடங்குந லிங்கம், க என்ற எழுத்தில் தொடங்கும் கருடம், கூ என்ற எழுத்தில் தொடங்கும் கூர்மம். ஸ்க என்ற எழுத்தில் தொடங்கும் ஸ்கந்தம என 18 புராணங்களின் செய்யுள் பெயாகளாகும். இவைகளில் சிவனைப்பற்றியவை சைவம், பவிஷ்யம், மார்க கண்டேயம. லிங்கம், ஸ்காந்தம், பரமமாண்டம் என 6 ஆகும். விஷ்ணுவைப்பற்றியவை—வைஷ்ணவம், பாகவதம், நாரதீயம், வராஹம், வாமனம், காருடம கூர்மம, பத்ஸ்யம் என 8 ஆகும். ப்ரம்மாவைப்பற்றியது —ப்ரமமம், பத்மம என 2 ஆகும அக்னியைப் பறறியது ஆக்னேயம ஆகும். ஸூர்யனைப்பற்றியது—ப்ரமம வைவர்த்தம் ஆகும். இம்மகாபுராணங்கள் கிருதயுகத்தில் ப்ரம்மாவில் 100 கோடி செய்யுள்கள் கொணடதாகவும் பிறகு திரேதாயுகத்தில் தேவ ரிஷிகளால் 1 கோடி செயயுள்கள் கொணடதாகவும் துவாபரயுகத்தில் பகவான் வியாஸரால 4 லக்ஷத்து 8 ஆயிரம் செய்யுள்கள் கொணடதாகவும் எழுதப்பட்டன என்பது முன்னோர் கூற்று. வியாஸர் இவைகளை 5 நிலைகளில் எழுதினர். முதலில் வியாஸர் புராணஙகளை எழுத அதன்பின், ரோமஹர்ஷனா, ஸுமதி, அக்னிவர்சஸ், பராசரர், மைத்ரேயா என்பவர்களின் பரமபரையில் மகாபுராணங்கள நாட்டில் பரவின. இதன் பின் உபபுராணஙகள் "ஸநத்ஸுஜாதீயம்" தொடங்கி "பார்ககவம்" வரை 18 ஆகும. இத்தகைய அருமையான அருள தரும புராணக் கதைகளை ஆடம்பரப்ரியன், பாபீ, தேவாகள், குருமார்கள் இவர்களை இகழ்பவர்கள, கயவன, முதலானவர்களுக்குக் கூறககூடாது எனவும அமைதியும பொறுமையும் உளளவன், குருவுக்கும் கடவுளுககும் பணி செய்ய விரும்புகிறவன், எவரையும பகைக்காதவன், காழ்ப்பற்றவன், மனம், வாக்கு உடல் தூய்மையுள்ளவன இவர்களுக்குத்தான் புராணங்களைச சொல்லவேணடும எனவும் கூறப்பட்டுள்ளது —இனி ஒவவொரு புராணமாக எடுத்துச் சுருக்கமான விளக்கம் தரலாம்.

(தொடரும்)

சிறுவர் பகுதி:

# வாய்மை

உலகில பொய் பேசாதவர்களை அனைவரும் புகழ்ந்து கொண்டாடுகின்றனர். உயிரே போனாலும் பொய்யே பேச மாட்டேன் என்று உறுதியுடன் இருந்தான் அரிச்சந்திரன். எனவே தான் இன்று வரை அரிச்சந்திரன் கதை பலராலும் போற்றிப் பாராட்டப்பட்டு வருகிறது. அரிச்சந்திர புராணம் என்று காவிய வடிவிலும அரிச்சந்திரா என்று நாடக வடிவிலும அவன் புகழ் பேசப்படுகிறது. படித்தவர்கள் முதல பாமரர்கள் வரை அரிச்சந்திரன் கதையைப்படித்தும் கேட்டும பரவசமடைகின்றனர்.

மகாத்மா காந்தியடிகள தம சிறு வயதில அரிச்சந்திரா நாடகத்தைப பார்த்தார். அரிச்சந்திரனைப் போலவே இறுதி வரையிலும் மெய்யே பேசுவதென்று உறுதி பூண்டார். அவருக்குக் கடைசி வரையிலும் வாய்மையே சிறந்த ஆயுதமாக இருந்து வந்தது. 'வாய்மையே வெல்லும்' என்பது அவர் வாழ்வில் உண்மையானது.

மகாத்மா காந்தியடிகள் மனதில் அரிச்சந்திரா நாடகம் ஆழப் பதிந்தது. அதனால் அவர் வாழ்வில் நல்ல திருப்பம் ஏற்பட்டது. காந்தியடிகளைப போலவே அரிச்சந்திரன கதையைப படிக்கும அனைவரும மெய்யே பேசவேண்டும என்ற உறுதியைப பெற்று வருகின்றனர். எனவே நாமும் அரிச்சந்திரன கதையைப் பற்றி ஒரு சிறிதேனும அறிதல் நல்லலவா!

வட இந்தியாவில அயோத்தி என்றொரு அழகிய நகரம இருந்தது. அதனைத் தலைநகராகக் கொண்டு சூரிய குலத்து மன்னர்கள அரசாண்டு வந்தனர். அம்மன்னர்களுள் ஒருவர் திரிசங்கு என்பவர். அவருக்கு மைந்தர் ஒருவர் பிறந்தார். அவர் தான் அரிச்சந்திரன்.

சந்திரமதி என்னும் மங்கை நல்லாளை அரிச்சந்திரன் மணம புரிந்து கொண்டான். இவர்கட்கு ஆண் பிள்ளை ஒன்று பிறந்தது. அக்குழந்தைக்குத் தேவதாசன என்று பெயரிட்டனர். தேவதாசனை லோகிதாசன் என்று அழைப்பதுமுண்டு.

அரிச்சந்திரன் பொய்யே பேசாதவன்; கோபம என்பதைச் சிறிதும் அறியாதவன். கேட்பவர்க்கெல்லாம் வாரி வழங்கும வள்ளல். சிறந்த அறிவாளி. நிறைந்த பக்திமான். நீதி தவறாது செங்கோல் செலுத்துபவன். எனவே அரிச்சந்திரனை மண்ணவரும அன்றி விண்ணவரும புகழ்ந்தனர்.

ஒரு சமயம் தேவலோகத்தில் தேவையில்லாத வீண சர்ச்சை ஒன்று நடைபெற்றது. விசுவாமித்திரர் என்னும் முனிவர் வசிஷ்டர் என்னும் முனிவரோடு வமபுககு வாதம் செய்தார். பூவுலகில் வாழும அரிச்சந்திரனைப் பொய்யன் என்றும, கள்ளன என்றும் பலவாறாக இகழ்ந்து பேசினார். ஆனால் வசிஷ்டரோ அரிச்சந்திரன் வாய்மை தவறாதவன் என்றும், உத்தமன் என்றும பலவாறாகப் புகழ்ந்து பேசினார்.

வசிஷ்டரின் வாய்மொழியைக் கேட்ட விசுவாமித்திரர் பெரிதும் சினம் கொண்டார. அரிச்சந்திரனைப் பொய்யனாக்கிக் காட்டுவதாகச் சபதம் செய்தார. அவ்வாறு செய்ய வில்லையென்றால கள்குடத்தைத் தன தலைமேல் சுமந்து கொண்டு தென் திசை தோறும திரிவதாகவும சபதம் கூறினார். பின்னர் விண்ணுலகை விட்டும வெளியேறினார. இவரின வம்புப் பேச்சால உத்தமரான அரிச்சந்திரன் வாழ்வில் சோதனைகள் ஏற்படலாயின.

விசுவாமித்திரர் நேராக அயோத்தியை அடைந்தார். தான் வேள்வி ஒன்று செய்யப் போவதாகவும் அதற்குப் பொன் தேவையென்றும் அரிச்சந்திரனிடம் கூறினார். அவர் கேட்ட பொன எவ்வளவு தெரியுமா?

வலிமை வாய்ந்த வாலிபன் ஒருவன் யானையொன்றின் மேல் ஏறி நின்று கொண்டு கல் ஒன்றை எறிய வேண்டும். அக்கல் எவ்வளவு தூரம் செல்லுமோ அவ்வளவு உயரத்துக்குப் பொன்னைக் குவித்துத் தரவேண்டும்.

இல்லையென்று சொல்வதை அறியாத அரிச்சந்திரன் அதற்கும் இசைந்தான். முனிவர் அப்பொன்னைத்

திரு. மா சீதாராமன்-காஞ்சிபுரம்.

தனக்கு தேவைப்படும வேறொரு சமயம் பெற்றுக் கொள்வதாகவும் அது வரை அப்பொன்னைத் தனக்காகப் பாதுகாத்து வைக்குமாறும கூறினார். அரிச்சந்திரன் அவ்வாறே செய்வதாக முனிவருக்குச் சத்தியம் செய்து கொடுத்தான்.

முனிவர் நேராகக் கானகம் வந்தார். மிருகங்களையும் பறவைகளையும் அழைத்தார். அரிச்சந்திரன் ஆண்டு வரும் நாட்டுப் பகுதியில் விளைந்துள்ள பயிர்களையெல்லாம் நாசம செய்யுமாறு ஆணையிட்டார். அவைகளும முனிவர் சொல்படியே பயிர்களை நாசம செய்தன.

பயிர்கள் நாசமாவதைக் கேட்ட றிந்த அரிச்சந்திரன் கானகம்சென்று வேட்டையாடிப பறவைகளையும் விலங்குகளையும் விரட்டியடித்தான்.

தன எண்ணம் பலிக்காததைக் கண்ட முனிவர் மன்னனுக்கு வேறு

ஒரு வகையில் தொல்லை கொடுக்க ஆரம்பித்தார். பெண்கள் இருவரை அரிச்சந்திரனிடம் அனுப்பி வைத்தார். அப்பெண்கள் அரிச்சந்திரன் முன்னர் ஆடிப்பாடி நின்றனர். அவர்கட்கு வெகுமதியாக யாது வேண்டும் என்று மன்னன் அப்பெண்களைக் கேட்டான். மன்னனிடமுள்ள பூச்சக்கரக் குடையை அவர்கள் பரிசாகக் கேட்டனர். முன்னோர்களுக்குச் சொந்தமான பூச்சக்கரக் குடையைத் தன்னால் தர இயலாதென்று கூறி விட்டான். அவ்வாறாயின் தங்களைத் திருமணம் செய்து கொள்ளவேண்டும் என்று அப்பெண்கள் வற்புறுத்தினர். மன்னன் அதனையும் மறுத்தான்.

இதனால் கோபமடைந்த அப்பெண்கள் அரிச்சந்திரனைக் கள்ளன் என்றும், கசடன் என்றும் பலவாறாகப் பழித்துப் பேசினர். எனவே காவலாளிகள் அப்பெண்களை அரண்மனையை விட்டும் விரட்டி விட்டனர்.

அவமானமடைந்த அப்பெண்கள் நேரே முனிவரிடம் சென்று நடந்ததைக் கூறினர். ஆத்திரமடைந்த முனிவர் அப்பெண்களை அழைத்துக் கொண்டு அரிச்சந்திரனிடம் வந்தார். தான் அனுப்பிய பெண்களை அவமானப்படுத்தியது தவறு என்றும், எனவே அப்பெண்களைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்றும் வற்புறுத்தினார். மகா உத்தமனான அரிச்சந்திரன் இதற்கு இசைவானோ? தான் அப்பெண்களை மணக்க முடியாதென்றும் அதற்குப் பதிலாக எது கேட்டாலும் தருவதாகவும் எடுத்துக் கூறினான்.

இதுவே தக்க சமயமென்று மன்னனது அரசு, நாடு, நகரம் அனைத்தையும் தனக்குத் தாரை வார்த்துக் கொடுக்குமாறு முனிவர் கேட்டார். மன்னனும் அவ்வாறே அனைத்தையும் தாரை வார்த்துக் கொடுத்து விட்டான்.

அனைத்தையும் கொடுத்த பின்னர் நாட்டில இருத்தல் கூடாதென்றும் எனவே காவியுடை அணிந்து நாட்டை விட்டு வெளியேற வேண்டும் என்றும் முனிவர் கூறினர். மன்னனும் தன் மனைவியுடனும், மகனுடனும் வெளியேற ஒப்புக்கொண்டார்.

நாட்டைவிட்டு வெளியேறுவதற்கு முன், வேள்வி செய்ய பொன் கொடுப்பதாக முன்பு ஒப்புக் கொண்டதைத் தற்போது நிறைவேற்றுமாறு முனிவர் கேட்டுக் கொண்டார். அனைத்தையும் தாரை வார்த்துக் கொடுத்த மன்னன் பொன்னுக்கு எங்கே போவான்?

தன்னை விற்றாவது அக் கடனைத் தீர்த்து விடுவதாக மன்னன் உறுதி கூறினான். எனவே அப்பொன்னை வாங்கிவர நட்சத்திரேசன் என்பவரை மன்னருடன் முனிவர் அனுப்பி வைத்தார்.

தன் மனைவி மகனுடனும் நட்சத்திரேசனுடனும் மன்னர் காசி நகர் நோக்கிச் சென்று கொண்டிருந்தான். விசுவாமித்ர முனிவரால் பல்வேறு சோதனைகள் மன்னனுக்கு ஏற்பட்டாயின அவற்றையெல்லாம் தம் மனவலிமையால் பொறுத்துக் கொண்டு அரிச்சந்திரன் அனைவருடனும் காசி நகரத்தைச் சென்றடைந்தான்.

தன் மனைவியையும், மகனையும் காலகண்டா என்னும் வேதியருக்கு மன்னன் விற்று விட்டான். விற்றதினால் கிடைத்த பொன்னைப் பெற்றுக்கொண்ட நட்சத்திரேசனோ அரிச்சந்திரனை விட்டுப்போவதாக இல்லை. தான் இதுவரை அவனுடன் அலைந்ததற்காகப் பதினாயிரம் பொன் கூலியாகத் தர வேண்டும் என்றான். பொன்னுக்கு மன்னன் எங்கே போவான்?

அவ்வூரிலுள்ள சுடலை காப்போனிடம் தன்னைவிற்று அதனால் கிடைக்கும் பொன்னை நட்சத்திரேசனுக்குக் கொடுத்து விடுமாறு தன்னுடன் வந்து கொண்டிருக்கும் மந்திரியிடம் மன்னன் கூறினான். சத்தியகீர்த்தி என்னும் பெயர் பெற்ற மந்திரியும் தன் மன்னனை சுடலையைக் காப்போனிடம் விற்று அதனால் கிடைத்த பொன்னை நட்சத்திரேசனிடம் கொடுத்தனுப்பினான்.

வாய்மையைக் காக்க வேண்டும் என்பதற்காக மாமன்னனான அரிச்சந்திரன் அடிமையாகவும் இருந்து ஏவல் செய்து வந்தான்.

காலகண்டர் வீட்டில் அடிமைத் தொழில் செய்து வரும் தேவதாசனை தருப்பைப் புல் பறித்து வருமாறு ஐயர் கட்டளையிட்டார். காலகண்ட ஐயரின் கட்டளைப்படித் தேவதாசன் தருப்பைப் புல் பறித்து வருவதற்காகக் கானகம் சென்றான். தருப்பையைப் பறிக்கும் போது புற்றிலிருந்த நல்ல பாம்பு ஒன்று தேவதாசனைக் கடித்து விட்டது. இதனால் தேவதாசன் அங்கேயே துடிதுடித்து மாண்டான்.

தேவதாசனுடன் சென்ற பிள்ளைகள் இச்செய்தியை சந்திரமதியிடம் தெரிவித்தனர். தன் மகன் மாண்டான் என்ற செய்தி கேட்டுச் சந்திரமதி மயங்கித் தரைமேல் வீழ்ந்தாள். பின்னர் ஒருவாறு தெளிவடைந்து எழுந்தாள். காட்டுக்கு ஓடோடி வந்தாள். மாண்டு போன மகனைத் தன் மடிமேல் கிடத்தினாள். பெற்ற வயிறு பற்றியெரிந்தது. பலவாறு புலம்பினாள். ஒருவாறு மனந்தேறிப் பிணத்தைச் சுடுதற்குச் சுடலையை நாடிச் சென்றாள்.

சுடலையில் தன் மகனைக் கிடத்தினாள். அப்போது நடு இரவு. கள்ளத்தனமாகப் பிணத்தைச் சுடுதற்கு யாரோ வந்திருப்பதாக அச்சுடலையைக் காத்து வரும் அரிச்சந்திரன் எண்ணினான். எனவே பிணத்தருகே வந்தான். இருட்டு நேரமானதால் தன் மனைவியையும் மகனையும் அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை.

பிணத்தைச் சுடுதற்குச் சேரவேண்டிய கால் பணத்தையும் முழந்துணியையும் கொடுத்தபிறகே பிணத்தை

சுடவேண்டும் என்று அரிசசந்திரன் கூறினன். தான் அனுதையென்றும் கொடுபபதற்குத் தனனிடம ஏதும் இலலையென்றும சந்திரமதி கூறினள். அத்துடன தன் வரலாறு முழுவதனை யும் சோகமுடன் எடுத்துக்கூறினள.

மாண்டு கிடப்பவன் தன் மகனே யென்பதறிந்து அரிசசந்திரன் துடி துடித்துப் போனன. சுடலையைக காபபவன் மாமன்னனுகிய தன் மண வாளனே யெனபதறிந்து சந்திரமதி யும் சிந்தை கலங்கினள்.

பிணத்தைச் சுடுதற்கு சேரவேண டிய கால பணத்தையும், முழந் துண் டையும் பெற்றுவருமாறு காலகணட ரிடம் அரிச்சந்திரன சந்திரமதியை அனுபபிவைத்தான். மாண்டு கிடக் கும தன் மகனின் உடலைக் கணடு மன்னன் புலமபிக் கொணடிருந் தான்.

சந்திரமதி காலகணடர் வீடு நோக கிச் சென்று கொண்டிருந்தாள். வழி யில் குழந்தையின் பிணம ஒன்றைக் கண்டாள். அது அந்நாட்டை யாண்டு வரும் மன்னனின் குழந்தை. நாயோ நரியோ தன் குழந்தையைச சுடலையிலிருந்து தூக்கிவந்துபோட்டு விடடதாக எணணி அக்குழந்தை யைத் தன் கையால் எடுத்தாள். அப்போது காசி மன்னனது காவ லாளிகள அவவிடத்தை அடைந்த னர். குழந்தையின் உடலைத தாங்கி நிறகும் சநதிரமதியை மன்னன் முன் நிறுத்தினா. சநதிரமதியின் மேல் கொலைக குற்றம சாட்டினர்.

ஒரு பாவமும் அறியாத சந்திரமதி மனனனின் குழந்தையைத திருடிக் கொணடுவந்து கொலை செயததாகக் குற்றம சாடடப்பட்டாள எனவே அவளுக்கு மரண தண்டனை விதிக் கப்பட்டது.

காவலாளிகள் சந்திரமதியை அரிச் சந்திரனிடம அழைததுச்சென றனர். மன்னன ஆணைப்படிச சநதிரமதியின் தலையைச சீவி விடவேண்டும எனப தையும் எடுத்துக் கூறினர். மன்னன் என்ன செயவான்! பாவம்!

இத்துனபங்களுக்கெல்லாம காா ணம விதி எனபதா! விசுவாமிததிரர் செய்து வரும் சதி என்பதா!

மன்னன் தன் மனதை உறுதிப் படுத்திக் கொண்டான். தன் மனை வியை வெட்ட வாளை ஓங்கினன். ஓஙகிய அவன் கையை மற்றொரு கை தடுததுநிறுத்தியது. அது யாருடைய கை தெரியுமா? விசுவாத்திரனின் கைதான்!

ஒரே ஒரு பொய பேசிவிட்டால் நாடு நகரங்களைத் திருபபிக் கொடுத்து விடுவதாகவும், இறநத மகனையும எழுப்பித் தருவதாகவும் கூறினர். ஆனல் அரிச்சந்திரனே தன் உயிரே போவதாயினும உண்மை பேசுவதிலிருந்து ஒரு போதும் தவற முடியாதென்று உறுதியாகக் கூறி விடடான். இதனல் அவமான மடைநத முனிவா வாயை மூடிக் கொணடு மாயமாய் மறைந்து விட் டார்.

மீண்டும் மன்னன் வாளை ஓங்கி னன். தனனை வணங்கி நிறகும் சந் திரமதியின் கழுத்தில அவ்வாள் மாலையாக மாறி விழுந்தது. அவர் கள் முன்னே பரமசிவனும் பார்வதி யும் காட்சி தந்து கொண்டிருநதனா. வாயமை தவறுத வள்ளல் எனறு தங்கள் வாயார அரிச்சந்திரனைப் பாராட்டிப் புகழ்ந்தனர். இறந்த மகனை எழுப்பித் தந்தனா. இழநத அரசையும, நாடு நகரத்தையும் மீண் டும் பெற அரிச்சந்திரனுக்கு அருள் புரிந்தனா. பல்லாண்டு காலம நல் லாட்சி புரிந்து வருமாறு வாழ்த்தி விடடு மறைந்தனர்.

மண்ணுலக மாநதரேயன்றி விண் ணுலகத் தேவர்களும் அரிசசந்திர னைப் பாராட்டினர். காரணம்என்ன? வாய்மை தவறுதவன் எனபதனல் அனறோ!

உலகத்தார் உள்ளங்களில எல் லாம ஒருவன் நினைககபபட வேண்டு மென்கிறார் வளளுவர். அவர் வாககைக கேளுங்கள்!

> உள்ளத்தால் பொய்யா தொழுகின்
> உலகததார்
> உள்ளத்துள எலலாம் உளன.
>
> —திருக்குறள்

★

## ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில், திருப்பதி.

| ஆர்ஜித சேவைகள் | கட்டணம் | நேரம |
|---|---|---|
| 1. அபிஷேகம் | ரூ. 1/- நபர் ஒருவர்ககு | காலை 9-30 முதல் 10-00 வரை |
| 2. ஸகஸ்ரநாமா அர்ச்சனை | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | மாலை 5-00 முதல் 6-00 வரை |

**பிரஸாத கட்டண விவரங்கள்**

| | | | |
|---|---|---|---|
| 1) | புளியோதரை | — | ரூ. 50-00 |
| 2) | பொங்கல் | — | ரூ. 55-00 |
| 3) | தத்யோதனம் | — | ரூ. 40-00 |
| 4) | சர்க்கரைப் பொங்கல் | | ரூ. 65-00 |
| 5) | தோசை | — | ரூ. 35-00 |
| 6) | ஸீரா | — | ரூ. 155-00 |
| 7) | கேஸரிபாத் | — | ரூ. 85-00 |

# குறுக்கெழுத்துப் புதிர்



திருமதி. விஜயா ரங்கராஜன்
சென்னை - 49



| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | | | 4 | | 5 | 6 | 7 |
| | | 8 | | | | | | | |
| | 9 | | | × | 10 | | | | |
| | | 11 | 12 | | | | | × | |
| 13 | | 14 | | 15 | | 16 | 17 | 18 | |
| 19 | | | | | 20 | | | | 21 |
| 22 | | | | | | | | | |
| 23 | | | | | | | | | × |
| 24 | | | | | 25 | | | | |
| 26 | | × | 27 | | | | | 28 | |

## குறிப்புகள்

### இடமிருந்து வலம்

1. ———யில் ஒரு வாக்கு அளி.
4. பிரணவ மந்திரம்.
8. இராமாயணத்தில் சிறந்த காண்டம்.
9. கண்ணனின் அவதார நட்சத்திரம்.
10. சிவபக்தன். (4-எ*)
11. புராணங்கள் எண்ணிக்கை. (5-எ)
13. காஞ்சி கருட சேவை மாதம (3-எ)
16. ———தலை காக்கும்.
19. இவ்வள்ளலை தெரியாதார் உளரோ? (2-எ)
22. திருப்பதி உள்பத மாநிலம் (4-எ)
23. சரஸ்வதி வீற்றிருக்கும பூ. (2-எ)
24. ———அறிந்து பிச்சை இடு.
26. குழந்தைக் கதைக்கு கரு.
27. நற்செயல் புரியாத நேரம.
28. ஆண்டாளின் மறுபெயர்.

(* எ—எழுத்துக்கள்)

### மேலிருந்து கீழ்

1. சுப்ரபாதத்துக்கு பதில் மார்கழியில். (5-எ)
2. சென்றைய ஆண்டு. (6-எ)
3. வள்ளுவரின் மனைவி.
5. கை ———அங்கு கண்டேன் கால் ———இங்கு கண்டேன்.
6. ———பட்டார் நெஞ்சம் போல.
7. மாமன். (4-எ)
10. காந்தி வாழ்நாளில் வைததிருந்தது.
12. சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவர். (6-எ)
14. மதுரையில் சிறபபுத திருவிழா. (4-எ)
15. திருககோவிலகளில் முககியம.
16. ——— தன்னைச் சுடும். ( -எ)
17. கிருஷ்ணனின் மனைவி. (4-எ)
18. கூனியின் மறு பெயர் (4-எ)
20. ராமனால் அந்திமக்கடன் பெற்ற பட்சி. (3-எ)
21. இந்துக்களின் முக்கிய நூல்.

(விடைகளுக்கு 44-ம் பக்கம் பார்க்க)

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

விளித்துக் கூறினர். தொடர்ந்து "இந்தப் பிண்டம் உமக்கு, இதை நீா ஏறறுக கொளள வேணும்" என்று சொல்லி அதைப் பூமியில் வைக்கபபட வேண்டிய இடத்தில், சந்தனு மகாராஜருடைய கை-ஐந்து விரல்கள்-உள்ளங்கை - மணிக்கட்டு - இது வரையிலாகத் தோன்றிற்று சந்தனு மகாராஜர் ஜீவித்திருந்த காலத்தில் அவரை நனருகப் பார்த் தவர்கள் பலரும அப்போது பீஷ்ம ருடன் இருந்தனா. அவர்கள் இந்தக் கையை எளிதில் அடை யாளம கணடு கொண்டனர். "இது சந்தனு மகாராஜனுடைய கையே தான். பீஷ்மரே! நீர் மஹா பாக்ய சாலி. இறநது போன தந்தை மீண் டும தனது பழைய வடிவத்தை நம் கண முன கொணர்நது நிறுத்துவது அசாதாரணமான நிகழ்சசி. உமது பகதி சிரத்தைகளைக் கண்டு வியந்து சந்தனு மகாராஜர் இவவாறு செய் திருககிருர். இது போன்ற பாக்கியம் எனறும் யாருக்கும் கிட்டியதில்லை. சீக்கிரம பிதாவின கையில் ஸாக்ஷாத் தாகவே பிண்டத்தைக் கொடுத்து வணங்கும்" என்று புகழ்ந்து கூறினர்.

பீஷ்மருக்கு மட்டும் தனது தந்தை யின கை தெரியாதா எனன? தந் தைக்குத் தன்னிடம இருநத வாத் ஸல்யம, மறறவரைக் காட்டிலும இவருக்கே நனருகத் தெரியும் மன தைக் குழப்புகிற இந்த அதிர்ச்சி கரமான சம்பவத்தில பீஷ்மா தேறி விட்டார்! அந்தக கையில் அவர் பிண்டத்தை கொடுக்கவில்லை தன கையிலேயே வைத்துக் கொண்டிருந தார்!! அருகிலிருநதவாகளுக்கு இதன் உட்கருத்து விளஙகவே இல்லை. "அவரே தன கையை நீட்டிக கேட் கும்போது கொடுக்காமல் மறுபபது மகாபாபமிலலையா? இநதப் பிண்டம் அவருக்காகத் தானே? ஏன கொடுகக மறுக்கிறீர்? எனறு கேட்டனர். "இந்தக் கை மறைய வேண்டும்.

# தேவகியின் புலம்பல்



திரு. பி. ஆர். சேஷாத்ரி-சென்னை-20.

கண்ணன் கதை நம அனைவருககும தெரிந்ததே அவன் பிறந்த வுடன் வசுதேவர் அவனைக் கமசனிடமிருந்து காப்பாற்றவேண்டி, கோகு லத்துககுக கொண்டு சென்று அங்குவிட்டு விட்டுத் திரும்பி வருகிருர். தானபெறறெடுத்த குழநதையை ஈனற சிறிது நேரத்திலேயே அதனை மற்றவர்களிடம்ஒப்புவிக்கும் துரதிஷ்டநிலை ஏறபடுகிறது அந்தத்தாய்க்கு அவளுககுத் தனனுடைய குழநதையின பால லீலைகளைக கண்டுக்களிக்க முடியாதபடி தாயமை இனபத்திலிருந்து தேவகி வஞ்சிக்கபடும்படியாக ஏறபடுகிறது. பிரிவு எனற கானல் அவளை வதைக்கிறது.

தாய என்றதும் தாயபபாலின் நினைவு ஏற்படுகிறது தாய் தன குழந்தைககுப் பால நினைந்தூட்டும்போது எவ்வளவு ஆனந்ததலை அடைவாள்! அநத நேரததில் தாயும சேயும பரிமாறிக் கொள்ளும் அனபுப் பார்வை குழவி வாய்பற்றிப் பருகும்போது தாய்க்கு ஏற்படும் அளவிலாத பேரானநதம!! இவற்றை எலலாம தேவகியினுல் அனுபவிக்க முடிந்ததா? இல்லை. இதனைக கண்டார் ஆழவாாகளிலே "கூடவர் கோன" என்று சிறப்பாக அழைககப்படும் குலசேகர ஆழவார்.

தாயின தவிப்பை தன்னுடைய அருடபாசுரங்களினமூலம வெளி யிடடுளளாா தேவகி அழுது புலம்புவதாகத தானும் புலமபுகிருர். தேவகியின புலம்பலைக கேடக கேடக நாம் துயரக் கடலில் மூழ்கி விடு கிருேம். சோக வெள்ளததில ஆழ்நது விடுகிருேம். தேவகியின் வேதனை மூசசு நம் கண்களில கண்ணீா பெருகச செயகிறது.

இதோ! அவர் அருளிய பரசுங்களிலிருநது ஒரு பாட்டு.—

குழகனே எந்தன கோமளப பிள்ளாய்
 கோவிந்தா என் குடங்கையில் மன்னி
ஒழுகு பேரேழில் இளஞ் சிறுதளிர்போல்
 ஒரு கையால் ஒரு முலைமுகம் நெருடா
மழலை மென்னகை யிடையிடை அருளா
 வாயிலே முலையிருக்க எனமுகததே
ஏழில் கொள் நின்றிருக்க கண்ணிணை நோக்கத் தன்னையும்
 இழந்தேன் இழந்தேனே!

வெறும் தரையில் தர்பங்கள் காணப் பட வேண்டும், அதன மேல் தான் நான் பிண்டத்தை வைப்பேன் தர்ம சாஸ்திரஙகளில் அப்படியே தான் சொல்லப் பட்டிருக்கிறது. என் தநதையாருக்கு என்னிடம் இருக்கும் வாத்ஸல்யம் உணமையாக இருககு மாகில் இப்பொழுதே இந்தக் கை இந்த இடததிலிருநது அகல வேணுமட சாஸ்திரப்படி தர்பங்களின மேல் பிண்டத்தை வைக்கும வாய்ப்பை எனககளிகக வேணும்'' என்று உள்ளக குமுறலுடன் வேணடிக் கொணடாா. உடனே கை மறைந்தது. வெறும தரையில் தர்பங்கள காணப்படடன. பீஷமர் அவற்றின மேல் பிண்டத்தை வைத்து, ச்ராதத காரியததை முடித்தார்.

தாமானுஷடானததில் பீஷமரு டைய தளராத உறுதிககு இது ஒரு எடுத்துக் காட்டு. இராமனும பீஷ்மரும் மகாவீரர்களாக விளஙகினர் புற எதிரிகளை வெல்லும் ஆற்றல் மட்டும இதற்குக் காரணமிலலை அகத்தில் உலாவும் பகைவாகளாகிய-காமம - குரோதம - இதயாதிகளையும் அலக்ஷ்யமாய வெனறவர்கள் இவ விருவரும். முந்தையதை விடப் பிந்தியது செய்தறகரிது. பல சோதனை களில், சிக்கிய போதும், இவவிரு வரும் உள் நிலாவிய பகைவாகளை அறவே அடககி தர்மததை நிலை நாடடியுள்ளனர். இப்படிப்பட்ட மகா தர்மாதமாவான பீஷமா வேதோக்தமான யாகங்களை, மனைவி யில்லாமல் முறை பிசகிப பணணி யிருபபாரா? எனறு நாம சிநதித்துப பார்க்க வேண்டும்.

குமாரிலபட்டர் இவ்வழிகளிலெல் லாம் உட்புகுந்து ஆராயநது பாாத திருககிறாா. இவவிஷயத்தை இவ வளவில வாசகர்களின சிநதனைக்கு விட்டு, "இது போன்ற தாம சங கடத்தில் அகபபட்டவர்கள மற்றும எவரேனும (இதிகாஸ புராண உப நிடதங்களில்) உண்டா?" என்னும கேள்விக்குப் பதிலளிபபோம்.

ஆதியந்தமில்லாத வரலாற்றுக் காலத்தில் பல்லாயிரவர் இப்படி இருந்திருபபது ஸாதாரணமே. ஆனு லும் அவர்களைப் பறறி நமககு ஒன் றும தெரியவிலலை. சிலரைப பறறியே தான ஏதோ தெரிகிறது.

1 யாஜ்ஞவலக்யர்

இவரையறியாதார் இல்லை. தாம சாஸதிர கர்ததா உபநிஷத் ப்ரவித தர் வேத வயாஸருககே வேதம கறபித்தவர் இதெலலாம நாடு நகரமும் நனகறிநததேயாம இவா ஒரு தாம சங்கடத்தில் மாடடிக் கொண்டு, அசாதாரணமான உறுதி யினுலும சாமாதயததினுலும அநதக கடும சோதனையில வெறறி கண டாா்

இவருக்கு மனைவியர் இருவர் மூத தவள பெயர் "மைத்ரேயீ" எனபது இளையவள பெயர் "காதயாயனி" என்பது. இவ்விருவருககுள பரஸ பரம் பகைமையும சண்டையும சச் சரவும் நிரநதரமாக இருந்து வந்த தாக ஊகிகக இடமிருககிறது. மூதத வளான மைத்ரேயீ சிறந்த "பரம்ஹ வாதிநீ"யாக இருநதாள. இளைய வளான காத்யாயநீயோவெனில் சாதாரணமான பெணகளைப போல் இகலோக ஸுகஙகளிலேயே நாட்டங் கொண்டவளாக இருநதாள்

अथ ह याज्ञवल्क्यस्य द्वे भार्ये बभूवतुः मैत्रेयी च कात्यायनी च । तयोर्ह मैत्रेयी ब्रह्मवादिनी बभूव । स्त्री प्रज्ञैव तर्हि कात्यायनी।

(ப்ருஹதாரணய கோபநிஷத்-6-5) என்னும் உபநிஷத வாகயஙகளால இதையறியலாம.

யாஜ்ஞவலக்ய மகரிஷியும் சிறநத ப்ரம்ம வாதியாவார் தன மனம போலவே மைதரேயியின் மனமும அமைநதிருப்பதனுல இவருக்கு அவ ளிடம் ஒரு தனி மதிப்புணடு. வீட் டில் ஸர்வ காலமும சககளத்திச சண்டை. யாஜ்ஞவலகயருககு இது தீராத தொலலையாகி விடடது! என்ன செயவார்? பாவம்!! இதி லிருந்து மீள்வதெங்ஙனம்? அதற்கு ஒரே வழிதான உளது சன்னியாசம் கொள்வதுதான் அந்த ஒரே வழி. அதற்கேற்ற வைராக்யத்திலும் இவ ருககுக் குறைவொன்றுமில்லை அவ் வாறே செயயததுணிநது விடடார்.

இரணடு மனைவிகளுககும, உளள சொத்துக்களைப் பாகம் செய்து கொடுததுவிட்டால் விடடுப பிரச் சனை தீர்ந்து விடும. "இது தனது கடமை" எனறெணணினாா அவா. இதைச செய்துவிட்டு உடனே சன்னி யாசம கொள்வதாகத திட்டம.

மைத்ரேயியைக் கூப்பிடடார். "அடீ! நான் துறவு பூண்டு இவ்விடம் விட்டு விலகப போகிறேன. இநத காத்யாயனிககும உனககும் பாகப் பிரிவினை செயது பரஸபரம தகரா றிலலாமல செயதுவிடடுப போகி றேன" எனறு சொனனாா.

मैत्रेयि! इति हो वाच याज्ञवल्क्यः प्रव्रजिष्यन्वा अरे! अस्मात् स्थाना दहमस्मि । हन्त ते ऽनया कात्यायन्या अन्तं करवाणीति ।

(ப்ருஹதா உப 6-5)

என்னும உபநிஷத வாககியம இதையே தெரிவிககிறது.

மைதரேயீ கேட்டாள "பக வானே! இந்தச சொததுக்களால பேரினபததை அடைய முடியுமா?

யாஜ்ஞவலகயா நாடடாரைப் போல, செல்வத்தைக கொணடு நல் வாழவு வாழலாம. ஆனுல செல்வத தினுல மோக்ஷததைப பெறுவது முற றிலும் அசாததியம்.

மைதரேயீ "மோக்ஷததிறகு உப யோகபபடாத செல்வம எனக்கெ தறகு? "எனக்கு" அது வேணடாம். எனககு மோக்ஷமே வேணடும அதற் கேற்ற வழி உஙகளுககுத தெரியும். அதை எனககும உபதேசியுஙகள?"

(தொடரும்)

# வள்ளி திருமணம்

சிவபெருமான கண்களில் தோன்றி, திருநதபுவனங்கள ஈன்ற பிராட்டியின் பாலருநதி, சரவணப் பூந்தொட்டிலில் விளையாடி, மஙகை அறுவாககு அருளிசசெய்து, பிரம னின் செருக்ககறறி, சூரனைத் தடிநது, தேவேநதிரன மகளை மணநது தேவ லோகத்திறகு வாழ்வளிதது நமது ஊருக்கும வந்து, மககளில ஒருததி யாகிய பேதைப பெண வள்ளியை மணந்து நமககு வாழ்வளிதது நம உறவினாகளில் ஒருவனுகி நம நெஞ சங்களில வள்ளி மணாளனுக என றைக்கும் வீற்றிருப்பவன் முருகக் கடவுள்.

மாமரத்தின பெருமபகுதி கிளை களும், இலைகளுமாய் இருந்தாலும் அம்மரத்தின் பயன அதுதரும் கனி யாகும. அதுபோல் கந்தபுராணததில் சூரபனமனை வெற்றி கொளளும் செய்தி விரிவாகக் காணப்படினும், புராணத்தின் பயன் வளளி திரு மணமே ஆகும்

முருகனின மறற திருவிளையாடல் களைவிட வளளியைத திருமணம் செய்து கொண்டது மட்டும் ஏற்றம பெற்றதாய் அமைநதமைககுரிய காரணத்தை ஈண்டு விரிவாகப பார்ப் போம்.

**வள்ளியின் தோற்றமும் புனங்காத்தலும்:**

வேடுவர்கள் செயத தனிப்பெரும் தவத்திளுல், வள்ளியெம்பெருமாட்டி யார் வேடுவமன்னன் நமபிக்கு மக ளாகத் தோனறிளுா. பனிரெண்டு வயது நிரமபப் பெற்றதும் குல வழக்கப்படி, அவள தினைப்புன் காக்கச் சென்ருள்.

பச்சைபபசேல் என்ற தினைப் பயிர் விளைந்த புன்செய் நிலம். அங்கே சிற்றேனல் காக்கின்ருள் வளளி.

இங்கு வளளி என்பது ஜீவான்மா ஆகும. நம் உயிர் ஐமபொறிகளா கிய வேடர்கள் மத்தியில் வளர்கிறது உயிர்கள உடம்பைப் பெறறு, பொறிகளின வாயிலாக வரும் சிற் றின்பங்களையே, திரும்பத் திரும்ப நுகர்நது, இறப்பையும் பிறப்பையும மீண்டும மீண்டும அடைகின்றன இவ்வுலகம ஆன்மாககள் காவல்புரி யும பெரிய வயல் ஆகும. ஆளுல் உயிர்கள் நிலததில் இறையருளாகிய பேரின்பததை நாடாமல் சிற்றின் பததை அனுபவித்துக் காத்துக கொண்டிருககின்றன. இதனையே,

வள்ளி நெல்லை விளைவிக்காமல் சிறுபயிராகிய தினையைக் காத்திருந்த நிகழ்சசி விளக்குகிறது

**வள்ளி ஆலோலம்பாடுதல்:**

தினைப்புனம் காக்கும் வள்ளி இனி மையாக ஆலோலம்பாடிப பறவை களைவிரட்டுகிருள. அவள் ஆலோலம் பாடும போது மயஙகிய மான்கள் பாலைச சொரிநதன அப்பாலை புலிக் குட்டி அருந்தியது. புலியோ தன மடிப்பாலை பனறிககுட்டிககு இனிது ஊட்டியது; கையில வைத்திருந்த கல்லும் உருகிட கிளிகளும் உருகிட ஆலோலம பாடிளுன் எனபதை,

மையல் குறவர் குறத்தியர்கள் மருளு
மடம போய்த்தெருள்எய்த
மான்கள பசியும மனப்பயமும்
மறந்து சுரந்த மடிபபாலைப்
பையப பதுங்கும புலிப்பிணவின்
பறழுக்கருந்திக் கொலைமறந்த
பாரப்புலி தன் முலைப்பாலைப் பன்றிக்
குருளைக்கு இனிதூட்டக்
கையிற் கவணில பதித்த மணிக்
கல்லும உருகக்கிளிகள் தினை
கவராதிருந்து கசிந்துருகக் கனிவாய்
ஆலோலம் புகலும்
எதயறகுறத்தி மனம உருக்கும்
சமர்த்தா தாலோ தாலேலோ!
தாமக் குவளைத் திருமலை வித்தகனே
தாலோ தாலேலோ!

என்னும் திருமலை முருகன பிள்ளைத் தமிழப்பாடலால் அறியலாம்.

தினைப பயிாகளைத தின்ன வரு வதால், வள்ளி கிளிகளைப் பகைக் கிருள அவைகளை விரட்டுகிருள். ஐம்பொறிகளின் வழியே நடத்தும வாழ்க்கை, தினைச் சோற்றைப் போன்றது; அதை உண்ணுமபோது அதைப் பறித்துக் கொள்ள யாராவது பங்குகேட்டு விடுவார்களா என்னும் கவலை வந்து விடுகிறது! நமக்கு ஒரு பொருளிடத்து பற்று உண்டாளுல் அந்தப் பொருளை இச்சிக்கின்ற பிற ரிடம வெறுப்பும் பகையும் வந்து விடும் என்பதையே வளளி கிளிகளைப் பகைத்து ஆலோலம் பாடும் நிகழ்ச்சி குறிக்கிறது.

**முருகன் வேடனுக வருதல்:**

வள்ளிககுத திருவருள் புரிந்திட, முருகன் வேடனுக வந்தான். வள்ளி யிடம அணுகி இன்ப மொழிகள் பேசலுறருன். தன்னிடம் பேசாவிட் டால் பின்னர் வள்ளிக்குப் பெரிய பழி ஏறபடும என்று கூறிப் பயமுறுத் திளுர். இது தன்னியல்பு அறியாது கிடக்கும் ஆன்மாவிற்கு அஞ்ஞானத் தைப் போக்கிய ஞான உணர்ச்சிக் குரிய அவாவினை இறைவன் எழுப்பு வான் என்பதைக் குறித்தது.

திரு மீ. சீனிவாசன், எம் ஏ, பி.டி
பரமக்குடி.

**வேங்கை மரமாதல்:**

முருகன் வேடர் கோலத்துடன் வள்ளி நாயகியிடம் பேசிக் கொண்டிருக்கும்போது அங்கு வேடுவர் சூழ நம்பிராசன் வந்தான். இது உயிர்கள் ஞானம் பெறுவதறகுப் பொறிகள் தடையாய இருப்பதை உணர்த்தியது.

அப்போது இறைவன அடிமுதல் வேதங்களாகவும, நடுப்பாகம ஆகமங்களாகவும், கிளைகள் கலைகளாகவும் கொண்ட வேங்கைமரமாகி ஞானத்தை அருளகிறுன. அபபோது வேடாகள மரத்தை வெட்ட வருகிறார்கள். அப்போது புருகன் சனகாதி முனிவர்களுககு குமார வடிவுடன ஞானமுணர்த்திய சிவனபோல குமாரவேடம கொண்டு வளளி முன்னே வருகிறுன். அப்போது ஞானவேட்கை கொண்ட ஆன்மா வாகிய வள்ளி, ''வேடர்கள் தீயவர்கள்; ஓடிவிடுங்கள'' என அன்புடன் கூறுகிறுள். அதாவது ஞானம்பெற முயற்சிக்கும்போது ஐம்பொறிகளிலுல் உண்டாகும் துன்பம இங்கு உணர்த்தப்படுகிறது.

**இறைவன் கிழவனுதல்:**

வள்ளியின் உறைவினர் தம்மைப் பிடிக்க வருவது கண்டு முருகன் கிழவேடம் கொண்டு நிற்கிறுன். இறைவன் உயிர்களுக்கு குருவாக எழுந்தருளி தீக்ஷை கொடுத்து ஆணவம் முதலிய மலங்களைப் போக்கியருள்வான் இறைவன் என்பதைக் குறித்தது இது.

**யானை வருதல்:**

தீக்ஷை கொடுத்த இறைவனுகிய குரு உபதேசமும கொடுப்பான். ஓம்கார வடிவுடையது யானை. யானையைக காட்டியது வளளி அசசத்துடன் முருகனை அடைந்து தன்னைக காப்பாற்றுமாறு கோருகிறுள். அதாவது பொறிகள இன்பம் சிறிது காலமே இருநது அழியும தனமையுடையது என்று உணர்ந்த ஆன்மா தனியல்பு உணாநது இறைவன் திருவடிகளைப பறறுகிறது.

**வள்ளித் திருமணம்:**

இவவை உணாநது, இறைவனது அனபிறகுப பாத்திரமான உயிர் அவனுேடு இரண்டறக கலக்கும். கந்தவேள் தன்மருங்கில் வீற்றிருந்த வள்ளியம்மையைத் திருவருள் நோக்கம் புரிந்தருள அம்மை மானுடவடி நீக்கித் தெய்வக்கோலம் பெறுகிறுள். இறையனுபவம் பெற்றுவிட்ட ஆன்மா அருளின்பத்திலேயே திளைத்து நிற்கும் என்பது இத்திருமணததால விளககம் பெற்றது.

உயிா தனியல்பு அறியாது கருவிகளின இயல்பே தன்னியல்பு என மயங்கி உணர்வறறுக் கிடக்கும் போது இறைவன் தோனறி, உணர்வினை நலகி, உபதேசிதது தன்னுேடு இணைத்துக் கொள்வான எனபதைச் சிவஞான போதம எட்டாவது நூறபா,

''ஐம்புல வேடரின் அயர்ந்தனை
வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய் தவத்தினில
உணர்த்தவிட்டு
அனனிய மன்மயில அரன்கழல்
செலுமே''

என்று கூறுகிறது.

இநநூறபாவின இலக்கணத்திற்கு எடுத்துககாட்டாக அமைவதே வள்ளித் திருமணம் ஆகும

எனவேதான் திருவாடானைத் தல புராண ஆசிரியா,

''களிருக்கு நறியமலர்க் கானகத்தில
வேடர்குலக்கனியான
வள்ளி அள்ளித்தரும தினை மாமகிழ்ந்
தருந்தி ஆங்குஇவளை மணந்துவானில்
துள்ளிய மஞ்ஞையில ஏறிச் சூர்
தடிந்து அன்டரைபபுரந்து
துலங்காநிறகு
மளளிலே வேல் குமரகுரு முருகன
இருதாள் மலரை அகத்துள்
வைபபாம்''.

என்று பாடி மகிழுகிறுர் நாமும வளளி மணவாளனின திருவடிகளை மனததில் கொணடு பேரின்ப வாழ்வு பெற முயலவோமாக



**40-ம் பக்கத்திற்கான விடை**

### குறுககெழுத்துப் புதிர் விடை

| இடமிருந்து வலம்: | | மேலிருந்துகீழ்: | |
|---|---|---|---|
| 1. | திருவாதிரை | 1. | திருப்பாவை |
| 4. | ஓம | 2. | ருத்ரோதகாரி |
| 8. | சுநதர காண்டம | 3 | வாசுகி |
| 9. | ரோகிணி | 5 | வணணம |
| 10. | ராவணன | 6 | கடன |
| 11. | பதினெட்டு | 7 | அமமான |
| 13. | வைகாசி | 10. | ராட்டை |
| 16. | தருமம் | 12. | தியாகராஜர் |
| 19. | பாரி | 14. | சிததிரை |
| 22. | ஆந்திரா | 15. | குடமுழுககு |
| 23. | தாமரை | 16. | தனவினை |
| 24. | ஜனகர் | 17. | ருகமணி |
| 25. | பாத்திரம் | 18. | மந்தரை |
| 26. | நீதி | 20. | ஜடாயு |
| 27. | ராகு காலம | 21. | சீதை. |
| 28. | கோதை | | |

# ★ செய்திச் சுருக்கம் ★

## ஆகம வித்வத் சதஸ்

அண்மையில திருப்பதி அடுத்துள்ள நரசிங்காபுரத்தில் இருக்கும் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீவேங்கடேஸ்வரா வேத பாட சாலையில் வேத ஆகம வித்வத் சதஸ் ஒன்று நடைபெற்றது. இவ்விழாவினை தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. ஜி. குமாரசுவாமி ரெட்டி அவர்கள் துவக்கி வைத்து உரையாற்றுகையில் வேதங்களின் பெருமையை ஒவ்வொரு இந்தியனும் அறிந்து கொள்ளும் வகையில் நாட்டில் மேலும் பல வேத பாட சாலைகள் நிறுவப்பட வேண்டும் என்று குறிப்பிட்டு, தி. தி. தேவஸ்தானம் இது சம்பந்தமாக மேற்கொண்ட திட்டங்களையும் கருத்துக்களையும் வேத வல்லுநர்கள் ஒரு வாய்ப்பாகக் கொண்டு செயல்பட வேண்டும் என்றும் குறிப்பிட்டார். தொடர்ந்து பேசுகையில் வேதங்கள் சம்பந்தப்பட்ட பதிவு நாடா தொகுப்புகள் பொது மக்களுக்கு எளிதில் கிடைக்கும் வண்ணம் முயற்சிகள் பல தி. தி. தேவஸ்தானத்தாரால் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன என்று கூறினார்.



வேதவிற்பன்னர்கள் கௌரவிக்கப்படும் போது

இவ்விழாவின்போது, வேத பாட சாலை முதல்வர் திரு. டி. ராமசந்திர சாஸ்திரி அவர்கள் ஆண்டு அறிக்கையினை வாசிக்க, தி. தி. தே. பொது ஜனத் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்ய நாராயண மூர்த்தி அவர்கள் தி. தி. தே. மேற்கொண்ட புதிய முயற்சிகளை விளக்கிப் பேசினார். தி. தி. தே. கல்வி அலுவலர் திரு. பி. சந்திரசேகர நாயுடு அவர்கள் வேத அறிஞர்களுக்குப் பரிசுகள் வழங்கி, பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார்.




மாருதி காரினைப் பெற்றுக்கொளல்

## மாருதி கார்

7-7-84 அன்று, பொது மக்களின் நனமைக்காக குறைந்த விலையில் தயாரிக்கப்படும் மாருதி உத்யோக் நிறுவனத்தாரின் முதல் தயாரிப்பு கார் ஒன்று, அந்நிறுவனத்தின் சார்பில், அந்நிறுவனத்தின் தலைவர் திரு. வி. கிருஷ்ணமூர்த்தி அவர்களால் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமிக்கு அளிக்கப்பட்டது. அக்காரினை தி. தி. தேவஸ்தானத்தின் சார்பில், தி. தி.

தே. செயலாட்சித் தலைவர் அவர்கள் பெற்றுக் கொண்டார்.

## பொன் விழா :

ஆந்திர மாநிலம் கடப்பா மாவட்டம் ராஜம்பேட்டையில் தி. தி. தே. பொன் விழா நிகழ்ச்சிகள் அண்மையில் இரண்டு நாட்கள் ஏ. பி. நாராயண ரெட்டி காலனி மைதானத்தில் நடைபெற்றன. கீதா பாராயணத்துடன் துவங்கப் பெற்ற முதல் நாள் விழாவிற்கு திரு. பி. சுப்ரமண்ய செட்டி அவர்கள் தலைமை வகிக்க, திருவாளர்கள் எஸ். லக்ஷ்மணய்யா, மல்லாதி சந்திர சேகர சாஸ்திரி, கொண்டமா சார்யலு, மற்றும் ஆனந்த கிரி மாதாஜி ஆகியோரின் சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. இரண்டாம் நாள் விழாவிற்கு அம்மாவட்ட ஆட்சித தலைவர் திரு. அமிதாபு பட்டாச்சாரியர் தலைமை வகிக்க, விழா நிகழ்ச்சிகளை தி. தி. தே. செயலாட்சித் தலைவர் துவக்கி வைத்தார். அன்று இரவு தி. தி. தேவஸ்தான அன்னமாச்சார்யா இசைக் குழுவினரின் இசைக் கச்சேரியும் தொடர்ந்து, திரு. வங்கல பட்டாபி பாகவதரின் ஸ்ரீநிவாஸ கல்யாணம் பற்றிய ஹரி கதையும் நடைபெற்றன.



திரு. ம. சந்திரசேகர சாஸ்திரி அவர்கள் சொற்பொழிவாற்றுகையில்



திருப்பதி அடுத்த ஸ்ரீநிவாசா மங்காபுரத்தில் உள்ள தி. தி. தேவஸ்தான ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயிலில் அன்மையில் 'ஸ்ரீ ஸாக்ஷாத்கார வைபவ' விழா நடைபெற்றபோது.

## அன்னமாச்சார்யா விழா

கி. பி. 15-ஆம் நூற்றுண்டைச் சார்ந்த தெலுங்குக் கவிஞரும், ஸ்ரீ வேங்கடேஸ்வரரின தீவிர பக்தருமான ஸ்ரீ அனனமாச்சார்யா பிறந்த தலமான ஆந்திர மாநிலம் கடப்பா மாவட்டம் தாள்ளபாக்கம் எனும் கிராமத்தில் அண்மையில் அன்னாரின நினைவு ஒட்டி கலை நிகழ்ச்சிகள பல நடை பெற்றன. இந்நிகழ்ச்சிகள் சம்பந்தப்பட்ட விழா ஆந்திர அரசு கலைத்துறை சார்பிலும் தி.தி. தேவஸ்தானத்தாரின் அன்னமாச்சார்யா நினைவுக் குழுவின் சார்பிலும் ஏற்பாடு செய்யப்பட்டது. இக்குழுவின்

தலைவரான டாக்டர். பெஜவாடா கோபால ரெட்டி அவர்கள் இவ்விழா வினைத் துவக்கி வைத்து, தம் சிறப் புரையில், இது போன்ற கவிஞர்கள் யாவரும் இறைவனின் திருஅவதாரங் களாகவே கருத வேண்டும் என்றும், அன்னமய்யாவின் கீர்த்தனைகளில் பொதிந்துள்ள சமயக் கருத்துக்கள் யாவும் பல்வேறு சமயங்களைச் சார்ந்த எல்லோருக்கும் ஒரு ஆன் மீகப் புதையலாகவே விளங்குகிறது என்றும் கூறினர். இவ்விழாவிற்கு 'ஆந்திர பிரபா' எனும் தெலுங்குத் தினசரியின் ஆசிரியர் திரு. வேங்க டேஸ்வரராவ் அவர்கள் தலைமை தாங்க, அம்மாவட்டத் தலைவர் திரு. பட்டாச்சார்யா அவர்களும் இவ் விழாவில பங்கேற்று உரையாற் றினர்.

## ஆண்டு விழா

தி. தி தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா உடல் ஊன முற் ரேருக்கான பயிற்சி மற்றும் தயா ரிப்பு நிலையத்தின் முதலாண்டு விழா அண்மையில் திருப்பதியில் நடை பெற்றது. இவ்விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. ஜி. குமார சுவாமி ரெட்டி அவர்கள், ஆந்திர முதல்வர் திரு. என். டி. ராமா ராவ் அவர்கள் அறிவித்தபடி, ரூ. 1 கோடி செலவில், தி.தி.தேவஸ் தானத்தின் உடல் ஊனமுற் ரேர் நிலையங்களான குருடர் செவி டர் மற்றும் காது கேளாதார் பள்ளி கள், செயற்கை கை கால் உறுப்பு தயாரிப்பு நிலையம் ஆகியன இந்நில யத்துடன இணைக்கப்படும் எனறு கூறினர் தொடர்ந்து பேசுகையில், உடல் ஊனமுற்ரேர்களுக்குத் தகுந்த வேலைகள் தர முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்படும் என்றும் குறிப்பிட் டார். இவ்விழாவில், தி.தி.தே. பொது ஜனத் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்ய நாராயண மூர்த்தி, இந் நிலயத்தின் இயக்குநர் டாக்டர். வை: ஆர். தனலட்சுமி, மற்றும் இந் நிலையத்தின் திட்ட இயக்குநர் திரு. கோவிந்த ராஜு ஹரி ஆகியோர் பங் கேற்று உரையாற்றினர்.

## விசாகப் படி பஜனை விழா :

சென்னை குரோம்பேட்டை நேரு நகரில் உள்ள குமரன் குன்றம் அடி வாரத்தில, குமரன் குன்றம் திருப் புகழ் மன்றம் ஏற்பாடு செய்யும் விசாக படி பஜனை விழா, பிரதி மாத மும் மாலை 6 மணிக்கு ஆரம்பமா கிறது. இதில் அஸ்தினபுரம் மாதர் சங்கத்தினர்களும், புலவர், கவிஞர் களும் கலந்து கொள்கிருர்கள். ஆஸ் திக அன்பர்கள் நிகழ்ச்சிகளுக்கு வந் திருந்து பயனடையும்படி கேட்டுக் கொள்கிறோம்.

தகவல்:

திரு. ஏ. டி. கிருஷ்ணன், குரோம்பேட்டை.

# ஆறு சிறப்பு

முருகப் பெருமானுக்கு முகம் ஆறு, வலது கண்கள் ஆறு. இடது கண்கள் ஆறு. நெற்றிக் கண்கள் ஆறு. வலது புயம் ஆறு. இடது புயம் ஆறு. அவனுடைய மநதிர எழுத்து ஆறு. ஆருவது திதியாகிய சஷ்டி விரத நாள். ஆருவது கிழமை முருக வழிபாட்டுக்குரிய, சிறப்பு நாள். ஆறு கார்த்திகைப் பெண்கள் பாலூட்டியதால் தான் அறு மீன்களின நட்சத்திரமாகிய கிருத்திகை சிறப்பு வழிபாட்டுக்கு உரிய நாள்.

ஆறு என்ற எண்ணிக்கை உயர்ந்தது. மிக மணமுள்ள சண்பகம், மனோரஞ்சிதம், நிலச் சம்பங்கி ஆகிய மலர்களுக்கு ஆறு இதழ்கள்.

கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, மேல், கீழ் என்ற ஆறு திசைகளே முருகப் பெருமானுக்கு ஆறு திருமுகங்கள்!

திருமதி. கமலா மாரியப்பன்-கோயம்புத்தூர்.

# பெண்களே! உங்களுக்குத்தான்?

பெண்கள இரவில் படுக்கும்பொழுது முனபுற கொசுவத்தை இரண்டு மடிப்பாவது எடுத்துவிட்டுத்தான் படுக்க வேண்டும்.

பெண்கள் முநதானியைத் தொங்கவிட்டு நடக்கக் கூடாது. இழுத்துச் செருக வேண்டும். முந்தானி ஆடினல் குடும்பமும் ஆடிப் போகும் என்று சொல்வார்கள.

கோவிலில் சாமி கும்பிடும்பொழுது பின்னங்கால்கள் இரண்டை யும் பின்னிக் கொண்டு, முன் நெற்றி தரையில் படுமாறு கும்பிட வேண்டும்.

கோவிலில் தீர்த்தம் வாங்கும்பொழுது இடக்கைக்கும் வலக்கைக் கும் நடுவில் முந்தானி நுனியை வைதது தீர்த்தம் வாங்க வேண்டும.

சுமங்கலிப் பெண்கள் குளிக்கும்பொழுது வெறும் தலைக்கு குளிக்கக் கூடாது. குளிப்பதற்குமுன சிறிது மஞ்சளை உரைத்து முகத தில் பூசிக் கொண்டுதான தலை முழுக வேண்டும்.

குத்து விளக்கு ஏற்றும் பொழுது ஒரு திரி மட்டும் போடக் கூடாது. இரண்டு திரிபோட்டு ஒரு முகம் ஏற்ற வேண்டும்.

காலையில் வாசலுக்கு சாணி தெளிக்கும்பொழுது பழைய சாணி யாக இருந்தாலும் பரவாயில்லை, தண்ணீர் மட்டும் புதிதாக எடுத்துச் சேர்த்துத் தெளிக்க வேண்டும்.

தொகுப்பு: டாக்டர் ஏ. ஆர். என். துரைராஜ்.

ஆதாரம்: கூட்டுறவு (மலேசியா கூட்டுறவு இதழ்).

## மதிப்புரை:

1. சௌந்தர்ய லஹரி (வடிவு தரங்கம்): தமிழாக்கியவர்: ஸீதா ராம கிருஷ்ணமூர்த்தி; விலை ரூ.1-00.

ஆதிசங்கரர் அத்வைதியேயாயினும் ஆன்மிகத் துறையில் ஈடுபடும் சாதகனுக்கு 'இஷ்ட தெய்வம்' ஒன்று தேவைப்படுவதை நன்கு ணர்ந்த அவர் இந்து சமயத்திலுள்ள ஏறக்குறைய எல்லாத் தேவதைகளின் பெயரிலும் சொல்லழகும் பொருளழகும் நிறைந்த கவின்மிகு தோத்திரங்கள் பலவற்றை இயற்றி, சமய வழிபாட்டிற்கு மாபெரும் தொண்டாற்றியிருக்கின்றார்.

அவற்றுள் ஒன்றே சௌந்தரிய லஹரி. முதல் நாற்பத்தொன்பது சுலோகங்களினாலான 'ஆனந்த லஹரி' அல்லது 'பேரின்ப அலைகள்' மற்றும் இறுதி ஐம்பத்தொன்று சுலோகங்களினாலான 'சௌந்தரிய லஹரி' அல்லது 'அழகின் அலைகள்' ஆகிய இரு பகுதிகளைக் கொண்டதாகக் கருதப்படுவது அது.

காவிய எழில், சாகித்தியச் சிறப்பு, ஆன்மிக அருள் ஆகிய அனைத்தும் நிரம்பியுள்ள இச்சுலோகங்கள் தேவி வழிபாட்டின் மேன்மையினையும் தேவியின எழில வடிவையும் நெஞ்சை நெகிழ வைக்கும வகையில் உணர்த்துபவை ஆகும்.

சம்ஸ்கிருதத்தில் இருக்கும் இச்சுலோகங்களைத் தமிழில், பாவகைகளில் சிறந்ததாகக் கருதப்படுவதும் "எளிய பதஙகள அடங்கியதும்" ஆன வெண்பா வடிவில், இலண்டனில் வசிக்கும் ஸீதா ராம கிருஷ்ணமூர்த்தி, சுவை சிறிதளவு கூடக குன்றுத வகையில் 'வடிவு தரங்கம்' என்னும் தலைப்பில் தமிழாக்கம் செய்துள்ளார். கவிதையிலும் பக்தியிலும் ஈடுபாடுடையவர் ஒவ்வொருவரின் கைகளிலும் இருக்க வேண்டிய உயர்ந்த நூல் இது.

2. ஆஞ்சநேய மாலை: (ஸீதாராம கிருஷ்ணமூர்த்தி; விலை ரூ. 1-00.)

அறிவு, பலம், புகழ், துணிவு, அச்சமின்மை, நோயின்மை, வாக்கு வன்மை ஆகியவை எல்லாம் அனுமனை நினைத்த மாத்திரத்திலேயே ஒருவருக்குக் கிடைக்கும் என்று ஆன்றோர்கள் கூறுவர். இராமாயணத்தில் தனிச் சிறப்புடன் விளங்கும் பாத்திரமான, சுந்தர காண்டத்தின் நாயகனை அனுமனின் உயர்வு அளவிடற்கரியது.

இராம காதையை எவ்வளவு தடவை கேட்டாலும் எவ்வாறு நமக்குத் திகட்டுவதில்லையோ, அவ்வாறே அனுமனின் ஏற்றத்தை எவ்வளவு தடவை கேட்டாலும் படித்தாலும் நமக்கு ஏற்படும் மகிழ்ச்சியும் மன நிறைவும் குறைவதேயில்லை.

ஆஞ்ச நேயரின் சிறப்புகளை எல்லாம், இராம பக்தர்களுள் தலையாயவரான அஞ்சனையின் ஆரமுதின் பெருமைகளை எல்லாம் கவிஞர் ஸீதா ராம கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இனிய வெண்பாக்களில் எலலோரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் பாடிப் பரவியிருக்கிறார். ஆஸ்திக உலகம் ஆதரித்துப் பாராட்ட வேண்டிய சிறந்த முயற்சி.

மேற்கூறிய இவ்இரண்டு நூல்களும் கிடைக்குமிடம; பாரதி பதிப்பகம், 108, உஸ்மான் சாலை, தியாகராய நகர், சென்னை-600017.

ஏ. நடராஜன்.



பேலூர் சென்ன கேசவசுவாமி கோயிற் சிற்பங்களில் ஒரு பகுதி.
திரு சோமசேகர் – கோலார்.

Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba Rao, M.A. and Printed at T. T. D Press by M. Vijayakumar Reddy, Manager, T. T. D. Press, Tirupati-517501.

